# உள்ளே...

## 1. மகாகவி பாரதியார் நினைவாக.

என்னை மிகவும் கவர்ந்த, பாதித்த இலக்கியவாதியென்றால் முதலில் நான் கருதுவது மகாகவி பாரதியாரைத்தான். முரண்பாடுகளற்ற மனிதர்கள் யாருளர். பாரதியிடமும் முரண்பாடுகளுள்ளனதாம். ஆனால் அவை அவரது அறிவுத் தாகமெடுத்த உள்ளத்தின் கேள்விகளின் பரிணாம வரலாற்றின் விளைவுகள். குறுகிய கால வாழ்வினுள் அவர் மானுட வாழ்வின் அனைத்து விடயங்களைப்பற்றியும் சிந்தித்தார். கேள்விகளையெழுப்பினார். அவற்றுக்குரிய விடைகளைத் தன் ஞானத்துக்கேற்ப அறிய முயற்சி செய்தார். இவற்றைத்தாம் அவரது எழுத்துகள் எமக்கு உணர்த்தி நிற்கின்றன. பாரதியாரின் எழுத்துகளிலிருந்து நான் அறிந்த , இரசித்த, எனையிழந்த முக்கிய விடயங்களாகப்பின்வருவனவற்றைக் கூறுவேன்:

1. மானுட வாழ்க்கையைப்பற்றிய, மானுட இருப்பு பற்றிய சிந்தனைகள்.
2. மானுட வாழ்வின் சமூக, அரசியல் மற்றும் பொருளியற் பிரச்சினைகள் பற்றிய அவற்றுக்கான தீர்வுகள் பற்றிய சிந்தனைகள்.
3. மானுட இருப்பு பற்றிய, மானுட சமூக, அரசியல் மற்றும் பொருளியல் பற்றிய கோட்பாடுகள் பற்றிய சிந்தனைகள்.
4. இயற்கை பற்றிய , பூவுலகின் ஏனைய உயிர்கள் பற்றிய சிந்தனைகள்.
5. தமிழ் மொழி , தமிழ் இனம் பற்றிய , சக மானுடர் பற்றிய சிந்தனைகள்.
6. மானுட உணர்வுகள் பற்றிய காதல், இயற்கையை இரசித்தல் போன்ற சிந்தனைகள்
7. மானுட ஆளுமைகள் பற்றிய சிந்தனைகள்.
8. மானுட வாழ்வின் சவால்களை எதிர்கொண்டு நடைபோடுதல் பற்றிய சிந்தனைகள்
9. பிரபஞ்சம் பற்றிய அவரது சிந்தனைகள்

இவற்றை முக்கியமானவையாக கூறுவேன்.

பாரதியாரின் எழுத்துகள் என்னைக்கவர்ந்ததற்கு இவற்றுடன் அவ்வெழுத்துகளில் பாரதியார் கையாண்ட மொழியும் முக்கிய காரணம். எளிமையான, உயிர்த்துடிப்பு மிக்க, கூறப்படும் பொருள் பற்றிய உணர்வினைத்தூண்டிவிடும்படியான அவரது தெளிந்த நீரோடை போன்று கூறப்படும் பொருளைத் தெளிவாக விளக்கும் தன்மை மிக்க மொழி என்னை மிகவும் கவர்ந்தது. தமிழில் வெளியாகும் இலக்கிய சஞ்சிகைகள் பலவற்றைப் பார்த்தால் பாரதியாரின் கவிதை வரிகளே அவற்றில் பலவற்றின் தாரக மந்திரங்களாக இருப்பதைக் காணலாம்.இது அவரது கருத்துச் செறிந்த மொழி நடைக்கு முக்கிய உதாரணங்களிலொன்று.

அவரது கவிதைகளில் வெளிப்படும் சமூக அரசியல் கருத்துகள் என்னை மிகவும் கவர்ந்தவை. அவர் வாழ்ந்த காலத்தில் வைத்து அவரது கருத்துகளை ஒப்பிடுகையில்தான் அவரது மேதமை நன்கு அறியப்படும். பெண் கல்வி , பெண் விடுதலை, தேசிய விடுதலை, மானுட வர்க்க விடுதலை என்று சிந்தித்த, எழுதிய அவர் ஒரு செயல் வீரரும் கூடத்தான். சமூக, அரசியற் செயற்பாட்டாளர்தான்.

அவரது எழுத்துகளைப்போல் அவரது ஆளுமையும் என்னை மிகவும் கவர்ந்தது. தன் வாழ்க்கையைபற்றி, தன் இதயத்து உணர்வுகளைப் பற்றியெல்லாம் அவர் எழுத்துகளூடு தன் எண்ணங்களை எம்முடன் பகிர்ந்துள்ளார். அவரது அவ்வுளவியற்போக்கும் என்னை மிகவும் கவர்ந்தது.

அவர் நினைவாக எனக்கு மிகவும் பிடித்த அவரது கவிதைகளிலொன்று..

நிற்பதுவே நடப்பதுவே பறப்பதுவே நீங்களெல்லாம்
சொற்பனந்தானோ? பல தோற்ற மயக்கங்களோ?
கற்பதுவே கேட்பதுவே கருதுவதே நீங்களெல்லாம்
அற்ப மாயைகளோ? உம்முள் ஆழ்ந்த பொருளில்லையோ?
வானகமே இளவெயிலே மரச்செறிவே நீங்களெல்லாம்
கானலின் நீரோ? வெறும் காட்சிப் பிழைதானோ?
போனதெல்லாம் கனவினைப்போல் புதைந்தழிந்தே போனதனால்
நானும் ஓர் கனவோ? இந்த ஞாலமும் பொய்தானோ?
காலமென்றே ஒரு நினைவும் காட்சியென்றே பல நினைவும்
கோலமும் பொய்களோ? அங்குக் குணங்களும் பொய்களோ?
சோலையிலே மரங்களெல்லாம் தோன்றுவதோர் விதையிலென்றால்
சோலை பொய்யாமோ? இதைச் சொல்லொடு சேர்ப்பாரோ?
காண்பவெல்லாம் மறையுமென்றால் மறைந்ததெல்லாம் காண்பமன்றோ?
வீண்படு பொய்யிலே நித்தம் விதி தொடர்ந்திடுமோ?
காண்பதுவே உறுதிகண்டோம் காண்பதல்லால் உறுதியில்லை
காண்பது சக்தியாம்; இந்தக் காட்சி நித்தியமாம்.

## 2, பாரதி ஒரு மார்க்ஸியவாதியா?

மகாகவி பாரதியார்பாரதியார் ருஷ்யப் புரட்சியினைப் பாராட்டி வரவேற்று 'புதிய ருஷ்யா' என்னும் கவிதையில் பின்வருமாறு பாடுகின்றார். "குடிமக்கள் சொன்னபடி குடிவாழ்வு/ மேன்மையுறக் குடிமை நீதி/கடியொன்றெழுந்தது பார் குடியரசென்று/உலகறியக் கூறிவிட்டார் அடிமைக்குத் தளையில்லை யாருமிப்போது /அடிமையில்லை அறிக என்றார்/இடிபட்ட சுவர் போலே கலி விழுந்தான்/ கிருதயுகம் எழுக மாதோ". இதன் மூலம் ருஷ்யப் புரட்சியினை இனங்கண்டுகொண்டு முதன்முதலாகப் பாடிய இந்தியக் கவிஞனென்ற பெருமையினையும் பாரதியாரே தட்டிக் கொள்கின்றார். பாரதியின் 'மாதர் விடுதலை' பற்றிய கவிதைகள், கட்டுரைகள், 'கியூசின்' என்னும் வீரமாதினைப் பற்றிய கட்டுரைகள், அம்மாதின் கவிதை மொழிபெயர்ப்புகள், புதிய ருஷ்யாவைப் பற்றிய கவிதை, 'செல்வம்', 'தொழிலாளர்' என்னும் தலைப்பிலான கட்டுரைகள், மற்றுமவர் தத்துவப் பாடல்கள் இவையாவுமே நமக்குக் கூறி நிற்பவை தானென்ன? பாரதி ஒவ்வொரு விடயத்தினைப் பற்றியும் பல்வேறுவகைப்பட்ட கருத்துகளையும் வெகு நுணுக்கமாகப் பரிசீலித்துள்ளாரென்பது மட்டுமல்ல, சமகாலத்து நடப்புகளையும் அறிந்துள்ளாரென்பதையும்தான்.

இன்றைய உலகில், முரணான பல்போக்குச் சிந்தனையாளர்கள் ஒவ்வொருவரும் தத்தமது பார்வைகளில் பாரதியினைக் கண்டு புளகாங்கிதமடைந்து கொள்கின்றார்கள். இந்நிலையில் பாரதியின் உண்மையான நிலைப்பாட்டினை அறிந்து கொள்ள முயல்வது மிகவும் அவசியம். இது பற்றிய அவனது முரண்பட்ட போக்குகளை, தேடலை அவனது எழுத்துகளினூடே அறிந்து கொள்ள முயலவதே சாலச் சிறந்தது.

'பாரத சமுதாயம்' என்னும் கவிதையில் அவன் பின்வருமாறு பாடுகின்றான்: "முப்பது கோடி ஜனங்களின் சங்கம் முழுமைக்கும் பொதுவுடமை./ஒப்பில்லாத சமுதாயம் உலகத்துக்கொரு புதுமை/ மனிதருணவை மனிதர் பறிக்கும் வழக்கம் இனியுண்டோ?/மனிதர் நோக மனிதர் பார்க்கும் வாழ்க்கை இனியுண்டோ?/பலனில் வாழ்க்கை இனியுண்டோ?" இவ்விதம் பாரதியின் கவிதைகள் 'பொதுவுடமை'யினையும் 'சமத்துவத்தையும்' வரவேற்றுப் பாடுகின்றன. இவ்விதம் பொதுவுடமைக் கருத்தினை வரவேற்றும், ஆயுதம் தாங்கி நிகழ்த்தப்பட்ட ருஷ்யப் புரட்சியினையும் வரவேற்றுப் பாடிய பாரதியை மார்க்ஸியவாதிகள் புரட்சியினை , ஆயுதப் புரட்சியினை வரவேற்றிடும் ஒரு கவிஞனாக எண்ணி விடுகின்றார்கள். ஆனால் உண்மை இதுவா? பாரதியாரின் ஆவேசத்தினையூட்டிடும் சுதந்திரப்பாடல்களையும், பாப்பாப் பாட்டில் "பாதகஞ் செய்பவரைக் கண்டால் நாம்/பயங்கொள்ளலாகாது பாப்பா!/மோதி மிதித்து விடு பாப்பா! /அவர் முகத்தில் உமிழ்ந்து விடு பாப்பா!" என்று பாடுவதையும் பார்த்துவிட்டு அவர் வன்முறையின் மூலம் தீர்வு காண்பதனையே விரும்புவதாக ஒரு சாரார் கருதிவிடுகின்றார்கள். ஆனால் இவை எல்லாவற்றையுமே தவிடு பொடியாக்கி விடுகின்றது பாரதியின் 'செல்வம்' என்ற கட்டுரை. அதில் அவர் பின்வருமாறு கூறுகின்றார்:

"ஏற்கனவே ருஷ்யாவில் ஸ்ரீமான் லெனின் ஸ்ரீமான் மிந்த்ரோஸ்கி முதலியவர்களின் அதிகாரத்தின் கீழ் ஏற்பட்டிருக்கும் குடியரசில் தேசத்து விளைநிலமும் பிற செல்வங்களும் தேசத்தில் பிறந்த அத்தனை ஜனங்களுக்கும் பொதுவுடமையாகி விட்டது. இக்கொள்கை ஜெர்மனியிலும் ஆஸ்த்திரேலியாவிலும் துருக்கியிலும் அளவற்ற வன்மை கொண்டு வருகின்றது. ருஷ்யாவிலிருந்து இது ஆசியாவிலும் தாண்டிவிட்டது. வட ஆசியாவில் பிரமாண்டமான பகுதியாக நிற்கும் சைபீரியா தேசம் ருஷ்யாவின் ஆதிக்கத்தைச் சேர்ந்ததால் அங்கும் இந்த முறைமை அனுஷ்டானத்திற்கு வந்து விட்டது. அங்கிருந்து இந்தக் கொள்கை மத்திய ஆசியாவிலும் பரவி வருகின்றது. ஐரோப்பாவிலுள்ள பிராண்ஸ் இங்கிலாந்து முதலிய வல்லரசுகள் இந்த முறைமை தம் நாடுகளுக்குள்ளும் பிரவேசித்து வரக்கூடும் என்று பயந்து அதன் பரவுதலைத் தடுக்குமாறு பலவிதங்களில் பிரயத்தனங்கள் புரிந்து வருகின்றார்கள். ஆனால் இந்த முறைமை போர் கொலை பலாத்காரங்களின் மூலமாக உலகத்தில் பரவிவருவது எனக்குச் சம்மதம் இல்லை. எந்தக் காரணத்தைக் குறித்தும் மனிதருக்குள்ளே சண்டைகளும் கொலைகளும் நடக்கக் கூடாதென்பது என்னுடைய கருத்து. அப்படியிருக்க ஸமத்வம், ஸகோதரத்துவம் என்ற தெய்வீக தர்மங்களைக் கொண்டோர் அவற்றைக் குத்துவெட்டு பீரங்கி துப்பாக்கிகளினால் பரவச் செய்யும்படி முயற்சி செய்தல் மிகவும் பொருந்தாத செய்கையென்று நான் நினைக்கின்றேன்.."

இதே கட்டுரையில் இன்னுமோரிடத்தில் பாரதியார் பின்வருமாறு கூறுகின்றார்:

"..'கொலையாளிகளை அழிக்க கொலையைத் தானே கைக்கொள்ளும்படி நேருகின்றது. நியாயம் செய்வோரை அநியாயத்தாலேதான் அடக்கும்படி நேருகிறது' என்று ஸ்ரீமான் லெனின் சொல்லுகிறார். இது முற்றிலும் தவறான கொள்கை. கொலை கொலையை வளர்க்குமே ஒழிய அதை நீக்க வல்லதாகாது. அநியாயம் அநியாயத்தை விருத்தி பண்ணுமேயொழிய குறைக்காது. பாபத்தை புண்ணியத்தாலே தான் வெல்ல வேண்டும். பாபத்தை பாபத்தால் வெல்லுவோம் என்பது அறியாதவர் கொள்கை..." இவ்விதமாகக் கூறுமவர் இன்னுமோரிடத்தில் பின்வருமாறு கூறுகின்றார்:"மேலும் ருஷ்யாவிலுங்கூட இப்போது ஏற்பட்டிருக்கும் 'ஸோஷலிஸ்ட்' ராஜ்யம் எக்காலமும் நீடித்து நிற்கும் இயல்புடையதென்று கருத வழியில்லை. சமீபத்தில் நடந்த மஹாயுத்தத்தால் ஐரோப்பிய வல்லரசுகள் ஆள்பலமும் பணபலமும் ஆயுதபலமும் ஒரேயடியாகக் குறைந்து போய் மஹாபலஹீனமான நிலையில் நிற்பதை ஒட்டி மிஸ்டர் லெனின் முதலியோர் ஏற்படுத்தியிருக்கும் 'கூட்டு வாழ்க்கை' குடியரசை அழிக்க மனமிருந்தும் வலிமையற்றோராகி நிற்கின்றனர். நாளை இந்த வல்லரசுகள் கொஞ்சம் சக்தியேறிய மாத்திரத்தில் ருஷ்யாவின் மீது பாய்வார்கள். அங்கு உடமை இழந்த முதலாளிகளும் நிலஸ்வான்களும் இந்த வல்லரசுகளுக்குத் துணையாக நிற்பர். இதனின்றும் இன்னும் கோரமான யுத்தங்களும் கொலைகளும் கொள்ளைகளும் ரத்தப் பிரவாகங்களும் ஏற்பட இடமுண்டு...".

இவை எவற்றை எமக்கு உணர்த்தி நிற்கின்றன. ஒன்றினை மட்டும் அவை எமக்கு வெகுதெளிவாகவே உணர்த்தி நிற்கின்றன. அதாவது பாரதியார் பொதுவுடமைச் சமுதாயத்தினை ருஷ்ய அமைப்பு முறையினை வரவேற்றிடுகின்றார். ஆனால்

ருஷ்யப் புரட்சி நிகழ்ந்த முறையினைத் தான் வரவேற்றிடவில்லை. அதே சமயம் ருஷ்ய நாட்டினைக் கொடுங்கோலன் ஜார் வருத்தி வந்திட்ட முறையினைக் கண்டு மனம் வெதிர்த்திட்ட பாரதியார் அக்கொடுங்கோலனின்றும் ருஷ்ய மக்களை விடுவித்த புரட்சி என்பதற்காக ருஷ்யப் புரட்சியினைப் பாராட்டிய போதும் வன்முறைப் புரட்சியினை அவர் மனம் ஒப்பவில்லை.

அதே சமயம் 'ருஷ்யாவின் விவாக விதிகள்' என்னும் கட்டுரையில் அவர் பின்வருமாறு எழுதுகின்றார்:

"..போல்ஷிவிக் ஆட்சி ஏற்பட்ட காலத்திலே அதற்குப் பலவகைகளிலும் தோஷங்கள் கற்பிப்பதையே தம் கடமையாகக் கருதியவர்களிலே சிலர் அதன் மீது ராஜரீக நெறிகளிலே குற்றங்கள் சுமத்தியது போதாதென்று, போல்ஷிவிஸ்ட் கட்சியார் ஸ்திரீகளையும் பொதுவாகக் கொண்டு ஒருத்தியைப் பலர் அனுபவிக்கிறார்களென்ற அபாண்டமான பழி சுமத்தப்பட்டது. ஆனால் 'கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளைக்கு'. ஒன்பதாம் நாள் உண்மை எப்படியேனும் வெளிப்பட்டுவிடும். ஒரு பெரிய ராஜ்ஜியத்தைக் குறித்து எத்தனை காலம் பொய் பரப்பிக் கொண்டிருக்க முடியும்? சில தினங்களின் முன்பு இங்கிலாந்து தேசத்தில் மாஞ்செஸ்டர் நகரத்தில் பிரசுரஞ் செய்யப்படும் 'மாஞ்செஸ்டர் கார்டியன்' என்ற பத்திரிகை நவீன ருஷ்யாவின் விவாக விதிகளைப் பற்றிய உண்மையான விபரங்களைப் பிரசுரஞ் செய்துள்ளது. அவற்றைப் பார்க்கும்போது நவீன ஐரோப்பிய நாகரிகம் என்று புகழப்படும் வஸ்த்துவின் நியாயமான, உயர்ந்த பக்குவநிலைமை மேற்படி போல்ஷிவிஸ்ட் விவாக சம்பிரதாயங்களில் எய்தப்பட்டிருக்கின்றதென்று தெளிவாக விளங்குகின்றது. ஆன்பெண் இருபாலாரும் பரிபூர்ண ஸமானம் என்ற கொள்கைக்கு பங்கம் நேரிடாதபடி விவாகக் கட்டை சமைக்க வேண்டும் என்பதே ஐரோப்பிய நாகரிகத்தின் உண்மையான நோக்கம். ..அந்த வகையில் பார்த்தால் ஐரோப்பாவின் இதரபகுதிகளைக் காட்டிலும் நவீன ருஷ்யா உயர்ந்த நாகரிகம் பெற்றுள்ளதென்பது ப்ரத்யஷமாகத் தெரிகிறது..."

இவையெல்லாம் நமக்குக் காட்டி நிற்பவைதான் யாதோ? பாரதியார் புதிய ருஷ்ய சமுதாய அமைப்பினை வரவேற்றிடுகின்றார் என்பதையல்லவா?..சமுதாயத்தில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகளை ஆவேசத்துடன் கண்டித்த பாரதியை நவீன ருஷ்ய அமைப்பு முறை கவர்ந்திட்ட போதிலும் அது ஏற்பட்ட வழியினை அவனால் மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டிட முடியவில்லை. அதனால் தான் இவ்விடயம் பற்றிய அவனது கேள்விகள் தேடல் ஆகியன அவனது பல்வேறு கட்டுரைகளில் வெளிப்பட்டு நிற்கின்றன. அதே சமயம் மேற்படி கட்டுரைகள் அவன் தன் மனதுக்கேற்ற வழியில் இவற்றிற்கான தீர்வுகள் பற்றிச் சிந்தித்திருப்பதையும் புலப்படுத்தி நிற்கின்றன. உதாரணமாக அவனது 'செல்வம்; என்ற கட்டுரையில் பின்வருமாறு அவன் கூறுவான்:

"..முதலாவது இந்தியாவிலுள்ள நிலச்சுவான்களும் முதலாளிகளும் ஐரோப்பிய முதலாளிகள் நிலச்சுவான்களைப் போல் ஏழைகளின் விஷயத்தில் அத்தனை அவமதிப்பும் குரூர சித்தமும் பூண்டோரல்லர். இவர்களுடைய உடமைகளைப் பிடுங்க வேண்டுமென்றால் நியாயமாகாது. அதற்கு நம் தேசத்திலுள்ள ஏழைகள்

அதிகம் விரும்பவும் மாட்டார்கள். எனவே கொள்ளைகளும், கொலைகளும், சண்டைகளும் பலாத்காரங்களுமில்லாமல் ஏழைகளுடைய பசி தீர்ப்பதற்குரிய வழியைத் தான் நாம் தேடிக் கண்டு பிடித்து அனுஷ்டிக்க முயல வேண்டும். செல்வர்களுடைய உடமைகளைப் பலாத்காரமாகப் பறித்துக் கொள்ள முயலுதல் இந்நாட்டிலே நான் மேற்கூறியபடி பொருந்தவும் செய்யாது. ஸாத்தியமும் இல்லை.."

மேலுள்ள பாரதியாரின் கூற்றினை வாசிப்பவர் பாரதியாரின் முரண்பட்ட போக்கினை வெகு இயல்பாகவே விளங்கிக் கொண்டிட முடியும். பொதுவுடமையினைப் போற்றிப் பாடிடும் பாரதியார், நவீன் ருஷ்யாவினை, அதன் அமைப்பு முறையினை, அங்குள்ள பெண்களின் நிலையினை வரவேற்ற பாரதியார் "இவர்களுடைய உடமைகளைப் பிடுங்க வேண்டுமென்றால் நியாயமாகாது. .." என்று கூறுவது 'தனியுடமை'யை ஆதரிப்பதாகுமன்றோ எனக் கேட்கலாம். ஆனால் இன்னுமோரிடத்தில் "செல்வர்களுடைய உடமைகளைப் பலாத்காரமாகப் பறித்துக் கொள்ள முயலுதல் இந்நாட்டிலே நான் மேற்கூறியபடி பொருந்தவும் பொருந்தாது.." என்று கூறுவது மறைமுகமாகக் கூறி நிற்பது தானெது? செல்வர்களுடைய உடமைகளைப் பலாத்காரமாகப் பறித்துக் கொள்ள முயலுதல் கூடாது. ஆனால் அமைதியானதொரு வழியில் இதற்கான தீர்வு காணப்படலாம் என்பதைத்தானே. ருஷ்யப் புரட்சியினை வரவேற்கும் பாரதி, அங்குள்ள பெண்கள் நிலையினை வரவேற்கும் பாரதி ஆயுதப் புரட்சி விடயத்தில் மிகவும் தடுமாற்றத்துடன் காணப்படுவதை மேற்படி கூற்றுகளால் அவதானிக்க முடிகிறது. இத்தகையதொரு தடுமாற்றத்தின் விளைவினை அவனது 'தொழிலாளர்' என்னும் கட்டுரையிலும் காணக்கூடியதாகவிருக்கிறது. அதிலோரிடத்தில் அவன் பின்வருமாறு கூறுவான்:

"..எனவே இந்தியாவில் முதன் முதலாக தொழிலாளர் கிளர்ச்சி தோன்றியிருக்கும் இந்தச் சமயத்தில் நம்முடைய ஜனத் தலைவர்கள் முதலாளிகள் தொழிலாளிகள் என்று இருதிறத்தாரையும் ஆதரவுடன் கலந்து புத்தி சொல்லி மனஸ்தாபங்களை ஏறவொட்டாதபடி முளையிலே கிள்ளிவிட முயற்சி செய்யவேண்டும். தொழிலாளரை முதலாளிகள் இகழ்ச்சியுடன் கருதி நடத்துவதை உடனே நிறுத்துவதற்குரிய உபாயங்கள் செய்ய வேண்டும்...ஆரம்பத்திலேயே நாம் இதற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்யாவிடின் நாளடைவில் ருஷ்யாவிலுள்ள குழப்பங்களெல்லாம் இங்கு வந்து சேர ஹேது உண்டாய்விடும்... ருஷ்யாவில் சமீபத்திலே அடுக்கடுக்காக நிகழ்ந்து வரும் புரட்சிகளின் காரணத்தால் அவ்விடத்து சைனியங்களில் பெரும்பகுதியார் தொழிற்கட்சியையும் அபேதக் கொள்கைகளையும் சார்ந்தோராய் விட்டனர். இதனின்றும் அங்கு ராஜ்யாதிகாரம் தொழிற்கட்சிக்குக் கிடைத்து விட்டது. தேசத்து நிதியனைத்தையும் சகல ஜனங்களுக்கும் பொதுவாகச் செய்து எல்லோரும் தொழில் செய்து ஜீவிக்கும்படி விதித்திருக்கின்றார்கள். தேசத்துப் பிறந்த ஸர்வஜனங்களுக்கும் தேசத்து செல்வம் பொது என்பது உண்மையாய் விடில், ஏழைகள் செல்வர் என்ற வேற்றுமையினால் உண்டாகும் தீமைகள் இல்லாமல் போகும்படி ஸகலரும் தொழில் செய்துதான் ஜீவிக்க வேண்டும் என்ற விதி வழங்குமானால் தேசத்துத் தொழில் மிகவும் அபிவிருத்தியடைந்து ஜனங்களின் சேஷமமும் சுகங்களும் மேன்மேலும் மிகுதியுறும். எனவே

ருஷ்யாவிலுள்ள அபேவாதிகளுடைய கொள்கைகள் அவ்வளவு தீங்குடையனவல்ல. ஆனால் அவற்றை வழக்கப்படுத்தும் பொருட்டு அவர்கள் நாட்டில் ஏற்படுத்தியிருக்கும் தீராச்சண்டையும் அல்லலுமே தீங்கு தருவனவாம். ருச்க்யக் கொள்கைகள் இப்பொழுது அனுஷ்டிக்கப்படும் ருஷ்யமுறைகளின்படி உலகத்தில் ஸ்தாபனம் பெற்று வெற்றி பெற வேண்டுமானால் அதற்குள்ளே முக்காற்பங்கு ஜனம் கொலையுண்டு மடிந்து போவார்கள். வெளிநாட்டுப் போர் அத்தனை பெரிய விபத்தன்று. நாட்டுக்குள்ளேயே செல்வர்களும், ஏழைகளும், ஒருவரையொருவர் வெடிகுண்டுகளாலும், துப்பாக்கிகளாலும், பீரங்கிகளாலும், தூக்குமரங்களாலும் கொல்லத் தொடங்குவார்களாயின் அது தீராத தொல்லையாய் விடுமன்றோ?"

இவையெல்லாம் வெளிப்படுத்தி நிற்பவைதான் யாதோ? இவற்றில் காணப்படும் பாரதியின் தடுமாற்றம் நமக்கு உணர்த்துவதுதானெதுவோ? சமுதாயப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு ருஷ்யாவின் கோட்பாடுகளை ஓரளவுக்கு பாரதியார் ஏற்றுக் கொள்கின்றார். ஆனால் அதனை அடைவதற்கு ருஷ்யா கைக்கொள்ளும் ஆயுதப் புரட்சியினையும், பாட்டாளிவர்க்கச் சர்வாதிகாரத்தினையும் தான் அவரால் ஏற்றுக் கொண்டிட முடியவில்லை. இந்த எதிர்ப்பின் விளைவே அவரது கற்பனாவாத சோஸலிசமான 'ஏழை', 'பணக்காரன்', 'தொழிலாளி', 'முதலாளி' ஆகியோருக்கிடையிலான இணக்கம் பற்றிய கோட்பாடுகள். இதன் காரணமாகவே செ.கணேசலிங்கன் 'பாரதி கண்ட கனவுப் பெண்' என்னும் கட்டுரையில் கூறுவதைப் போல் ('மேகம்', நவம்பர்-டிஸம்பர் 1982) பாரதியின் போக்கு இந்திய தேசிய முதலாளிகளின் புரட்சியோடு ஒன்றி நிற்பது போல் படுகிறது. ஆனால் உண்மையில் பாரதி முதாளித்துவப் புரட்சியொன்றினை எதிர்பார்த்திடவில்லை என்பதைத் தான் அவரது 'சுதந்திரப்பள்ளு' , 'விடுதலை', 'பாரத சமுதாயம்' போன்ற கவிதைகள் புலப்படுத்தி நிற்கின்றன. [ அதே சமயம் மானுடத்தின் முழுவிடுதலை பற்றியும் பாரதி பெரிதும் சிந்தித்திருக்கின்றானென்பதையும் அவனது படைப்புகள் நமக்குப் புலப்படுத்தி நிற்கின்றன. மானுடத்தின் முழுவிடுதலை அகவிடுதலயினைப் பெறுவதன் மூலம், மனிதர் இயற்கையுடன் இணக்கமாக வாழ்வதன் மூலம் மட்டுமே பெற முடியும் என்று அவன் கருதுவதையே அவனது 'சர்வமத ஸ்மரஸம்' , 'தாய்மாண்பு', 'அன்பு செய்தல்' முதலான கவிதைகள் உணர்த்தி நிற்கின்றன. ஆனால் பாரதியின் இந்த நிலைப்பாடு விரிவாக ஆராயப்படவேண்டியதொன்று]. அதே சமயம் மேற்படி கட்டுரையில் செ.கணேசலிங்கன் பாரதியின் இந்தப் போக்குக்குக் காரணம் பற்றிக் குறிப்பிடும் பொழுது "..விஞ்ஞான பூர்வமான சோஸலிசத்தைப் பாரதி அறிந்திருக்கவில்லை. சோஸலிச அமைப்பில் சாதி, சமய, பெண்ணடிமைத்தனப் பேதங்கள் எப்படி முழுமையாக நீக்கப்படும் என்பதை அவன் தெரிந்திருக்கவில்லை.." என்றும் கூறுவார். இவ்விதமாக 'மார்க்ஸியக்' கோட்பாடுகளைப் பற்றிய பூரண அறிவினை பாரதியார் அடையமுடியாமலிருந்ததற்கு அன்றைய சூழ்நிலை காரணமாகவிருக்கலாம். மார்க்ஸியக் கோட்பாடுகள் சம்பந்தமான போதிய நூல்கள் அவரது கைகளுக்குக் கிடைக்காமல் போயிருந்திருக்கலாம். கிடைத்திருந்தால் அவர் மான்செஸ்டர் கார்டியன் போன்ற பத்திரிகைகளில் வெளிவந்த கட்டுரைகளை விரிவாக ஆராய்ந்ததைப் போல் நிச்சயம் அக்குவேறு ஆணிவேறாக ஆராய்ந்திட முயன்றிருப்பார். 'வரலாற்றுப் பொருள்முதல்வாதம்'

பற்றியெல்லாம் விரிவாக ஆராய முயன்றிருப்பார். அவ்விதமெல்லாம் அவர் செய்யாததற்கு செ.க. கூறுவது போல் பாரதியாருக்கு அவ்விடயங்களில் பூரண விளக்கமில்லாமல் இருந்திருப்பதே காரணமாக இருந்திருக்கக் கூடும். இந்நிலையில் அவர் தன் அறிவுக்கெட்டிய வகையில் முதலாளி தொழிலாளிகளுக்கிடையிலான இணக்கத்தைத் தீர்வாகக் கொண்ட கற்பனாவாத சோசலிச அமைப்பென்ற தீர்வுக்கு வந்திருக்கலாம். அதற்கு மாறாக அவர் மார்க்ஸியத் தத்துவங்க்ளையெல்லாம் விரிவாக அறிந்துள்ள நிலையில் மேற்படி முடிவுக்கு வந்திருந்தால் செ.க.கூறுவதைப் போல் அவரை இந்திய முதலாளிகளின் புரட்சியுடன் ஒன்றியிருந்த ஒருவராகக் கருத முடியும். மாறாக மார்க்ஸியத் தத்துவம் பற்றிய பூரணமான விளக்கமற்ற நிலையில், அவர் வாழ்ந்த இந்தியச் சூழ்நிலைகளின் விளைவாக அவர் வந்தடைந்த தீர்வே அவரது ஏழை/பணக்காரன், முதலாளி/தொழிலாளி ஆகியோருக்கிடையிலான இணக்கம் பற்றிய கற்பனாவாத சோஸலிசத் தீர்வு [ ஏனென்றால் பொதுவுடமையினை, ருஷ்ய அமைப்பு முறையினை அவர் வரவேற்கின்றார்]. இந்நிலையில் பாரதி ஒரு மார்க்ஸியவாதியா என்னும் கேள்வியே அர்த்தமற்றதொரு கேள்வி. ஆனால் பாரதியின் மேதமை அவரது காலகட்டச் சூழலுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில்தான் எத்தனை மகத்தானதென்று புலப்படும். அதனை விட்டுவிட்டு இன்றைய சூழலிலிருந்து கொண்டு, தான் வாழ்ந்த சூழலை மீறிச் சிந்தித்த, வாழ்ந்த பாரதியை செ.க. முதலியோர் அலசுவது போல் அலசுவது பயனற்றது. உண்மையில் பாரதியார் அன்றையச் சூழலில் 'ருஷ்யா'வை பற்றித் தனது நோக்கினத் திருப்பியதும், பெண்களின் நிலை பற்றிய பிரச்சினையில் ரஷ்ய, ஐரோப்பிய முறைகள் பற்றிய ஆய்வினை நடத்தியதும், இந்திய தத்துவ நூல்களை விரிவாக ஆராய்ந்ததும், 'நிற்பதுவே நடப்பதுவே' என்னுங் கவிதையில் பொருள்முதல்வாத/கருத்து முதல்வாதத் தத்துவங்களையிட்டு ஆராய விளைந்ததும், தீண்டாமை/பெண் விடுதலை பற்றிச் சூழலை மீறிச் சிந்தித்ததும்..இவை யாவுமே மகத்தான விடயங்களாகும். அவர் வாழ்ந்த சூழலில் அந்த அளவுக்குச் சூழலை மீறிச் சிந்தித்ததே மாபெரும் அற்புதமெனலாம். இதுவே சரியான நிலைப்பாடாகப் படுகிறது.

[பாரதியார் நினைவாக இக்கட்டுரை பிரசுரமாகின்றது. முதன் முதலில் இக்கட்டுரை 4/2/1983 இல் எழுதப்பட்டது. இதனைத் தழுவிய இன்னுமொரு கட்டுரை 'தேடல்' இதழில் பிரசுரமானது.]

நன்றி*: 'பதிவுகள்'* ஆகஸ்ட *2007* இதழ் *92,* தேடல்

## 3. பாரதியின் பிரபஞ்சம் பற்றிய நோக்கு!

தத்துவஞானிகள் மண்டைகளைப் போட்டுக் குடைந்துகொண்டிருக்கும் தத்துவ மோதல்களிற்கு இன்றுவரை சரியானதொரு தீர்வில்லை. 'இவ்வுலகம், இங்கு வாழும் ஜீவராசிகள், இப்பிரபஞ்சம் எல்லாமே அவன் விளையாட்டு. அவனின்றி அவனியில் எதுவுமேயில்லை' என்று சமயம் கூறும். இதனைக் கருத்துமுதல் வாதம் என்போம். நம்புபவர்கள் 'கருத்து முதல்வாதிகள்'. இவர்கள் 'சிந்தனை, புலனுணர்வு என்பவை ஆன்மாவின் செயலென்றும், இவ்வான்மாவானது அழியாதது, நிரந்தரமானது' என்றும், 'இவ்வுலகு, இயற்கை யாவுமே சக்தியின் விளைவு' என்றும் கூறுவார்கள். அதுமட்டுமல்ல 'இவ்வுலகமென்பது (காண்பவை, செயல்கள் எல்லாமே) சிந்தனையின் அதாவது உணர்வின் விளைபொருளே' என்றும் கூறுவார்கள். ஆனால் இதற்கு மாறான கருத்துள்ள தத்துவஞானம் 'பொருள் முதல்வாதம்' எனப்படுகின்றது. இதனை நம்புபவர்கள் 'பொருள்முதல்வாதிகள்' எனப்படுவர். இவர்கள் கருத்துப்படி 'ஆன்மா நிலையானது, அழிவற்றது' என்பதெல்லாம் வெறும் அபத்தம். கட்டுக்கதை. சிந்தனை என்பது பொருள் வகை வஸ்த்துவான மூளையின் செயற்பாடே. நிலையாக இருப்பது இந்த இயற்கை (பொருள்) ஒன்றே'. இவ்வுலகினின்றும் வேறாகத் தனித்து ஒரு சக்தி இருக்கின்றது என்பதை எதிர்க்கும் இவர்கள் 'அப்படி எதுவுமில்லை' என்கின்றார்கள். 'இவ்வியற்கையில் ஏற்பட்ட பரிணாம மாற்றங்களே உயிரினங்கள் உருவாகக் காரணம்' என்கின்றார்கள். நவீன இயற்கை விஞ்ஞானத்தை இவர்கள் ஆதாரமாகக் கொள்கின்றார்கள். இந்நிலையில் பாரதியை ஆராய்வோமாகில் அவனும் இந்தப் பிரச்சினையை அசட்டை செய்து விடவில்லை என்பதைக் கண்டு கொள்ளலாம். பாரதியின் கீழுள்ள கவிதை வரிகள் அவனை ஒரு கருத்து முதல்வாதியாகக் காட்டுகின்றன. 'அல்லா' என்ற கவிதையில் பாரதி பின்வருமாறு பாடுகின்றான்.

"..பல்லாயிரம் பல்லாயிரம் கோடியண்டங்கள்
எல்லாத்திசையிலுமோரெல்லையில்லா வெளிவானிலே நில்லாது சுழன்றோட
நியமஞ் செய்தருள் நாயகன்.."

'மகாசக்தி வாழ்த்து' என்னும் கவிதையில் அவன் கூறுவதோ?

"..விண்டுரைக்க அரிய அரியதாய் விரிந்த வானவெளியென நின்றனை. அண்ட கோடிகள் வானிலமைத்தனை அவற்றில் எண்ணற்ற வேகம் சமைத்தனை. மண்டலத்தை அணு அணுவாக்கினால் வருவதெத்தனை யோசனை கொண்ட தூரம் அவற்றிடை வைத்தனை கோலமே! நினைக் காளியென்றேத்துவேன்.."

மேலுள்ள பாடல் வரிகள், மற்றும் பாரதியின் அனேக தெய்வப் பாடல்கள் கூறுவதென்ன? இந்த உலகம், இந்தப் பிரபஞ்சம் யாவற்றையும் ஆக்கியது ஒரு சக்தி , அதுவே கடவுள் என்பதையல்லவா? ஆனால் இவ்விதம் இயற்கைக்கு வேறாக ஒரு கடவுளைப் படைக்கும் கருத்து முதல்வாதியாக விளங்கும் பாரதியால் , கண்ணெதிரே தெரியும் காட்சிகளை, அவற்றின் உண்மையினைக் கருத்து முதல்வாதிகளைப் போல் மாயை என்று ஒதுக்கித் தள்ளிவிட முடியவில்லை. பொருள் உண்மையென்ற பொருள்முதல்வாதத்தினையும்

மறுத்து விட முடியவில்லை. பாரதியின் 'உலகத்தை நோக்கி வினவுதல்' என்ற கவிதையினைப் பார்த்தால்....

"..நிற்பதுவே, நடப்பதுவே, பறப்பதுவே நீங்களெல்லாம் சொப்பனம் தானோ? பலதோற்ற மயக்கங்களோ? கற்பதுவே, கேட்பதுவே, கருதுவதே, நீங்களெல்லாம் அற்ப மாயைகளோ? உம்முள் ஆழ்ந்த பொருளில்லையோ? வானகமே! இளவெயிலே! மரச்செறிவே! நீங்களெல்லாம் கானலின் நீரோ? வெறுங் காட்சிப் பிழைதானோ? போனதெல்லாம் கனவினைப் போல் புதைந்தழிந்தே போனதினால் நானுமோர் கனவோ? இந்த ஞாலமும் பொய்தானோ? காலமென்ற ஒரு நினைவும் காட்சியென்ற பல நினைவும் கோலமும் பொய்களோ? அங்கு குணங்களும் பொய்களோ?.."

இவ்விதமாகக் 'காண்பவை , கருதுபவை ' யாவுமே பொய்யோ எனக் கருத்து முதல்வாதிகளைப் போல் வினவும் பாரதியார் மேழுள்ள கவிதையின் இறுதியில் பின்வருமாறு முடிக்கின்றார்.

"..சோலையிலே மரங்களெல்லாம் தோன்றுவதோர் விதையிலென்றால், சோலை பொய்யாமோ? இதைச் சொல்லொடு சேர்ப்பீரோ? காண்பவெல்லாம் மறையுமென்றால் மறைந்ததெல்லாம் காண்பமன்றோ? வீண்படு பொய்யிலே நித்தம் விதி தொடர்ந்திடுமோ? காண்பதுவே உறுதி கண்டோம். காண்பதல்லால் உறுதியில்லை. காண்பது சக்தியாம். இந்தக் காட்சி நித்தியமாம்..."

ஆரம்பத்தில் கருத்து முதல்வாதிகளைப் போல் வினவிய பாரதி , இறுதியில் பொருள் முதல்வாதியாக முடிக்கின்றான். அதனால் தான் கருத்து முதல்வாதிகளைப் போல் 'காண்பதெல்லாம் மாயை'யென்று முடிக்காமல் 'காண்பது சக்தியாம். இந்தக் காட்சி நித்தியமாம்' என்று முடிக்கின்றான். இவ்விதமாக பாரதி தனிக் கருத்து முதல்வாதியாகவும் இல்லாமல், தனிப் பொருள்முதல்வாதியாகவுமில்லாமல் , கருத்து முதல்வாதத்திற்கும் பொருள் முதல்வாதத்திற்குமிடையில் ஒருவித இணக்கமான போக்கினை, சமரசப் போக்கினைக் கைக்கொள்பவனாகக் காணப்படுகின்றான். உண்மையில் பாரதி 'அல்லா', 'மகாசக்தி வாழ்த்து' மற்றும் பல பக்திப் பாடல்களின் அடிப்படையில் கருத்துமுதல்வாதியாகத் தென்பட்டாலும், 'உலகத்தை வினவுதல்' என்ற கவிதையினூடாக நோக்கும் போது மேலே கூறப்பட்டதைப் போல் இருவிதமான தத்துவவியற் போக்குகளுக்குமிடையில் ஒரு சமரசம் செய்பவனாகவே தென்படுகின்றான். உண்மையில் பாரதியிடம் காணப்படும் இத்தகைய முரண்பாடுகளெல்லாம் அவனது ஆர்வமிக்க, உலகை அறியும் நோக்கு மிக்க மனப் போக்குகளின் வளர்ச்சியின் வெளிப்பாடுகளே. இத்தகைய போக்கினையே அவனது 'சுயசரிதை' என்ற கவிதையின் பின்வரும் வரிகளும் புலப்படுத்துகின்றன.

"..மாயை பொய்யென முற்றிலும் கண்டனன். மற்றுமிந்த பிரமத்தினியல்பினை ஆய நல்லருள் பெற்றிலன். தன்னுடை அறிவினுக்கு புலப்படலின்றியே தேய மீதெவரோ சொலுஞ் சொல்லினைச் செம்மையென்று மனத்திடை கொள்வதாம் தீய பக்தியியற்கை வாய்ந்திலேன். சிறுது காலம் பொறுத்தினுங் காண்பமே.."

மாயை பொய்யெனக் கூறும் பாரதி, 'பிரமத்தின் இயல்பினை அறிய இன்னும் அருள் பெறவில்லை' என்று கூறும் பாரதி, 'அறிவிற்கு புலப்படாத எவற்றையும் நம்பும் தன்மையில்லாத பாரதி, அத்தகைய அறிவு நிலையினை அடையும் வரை பொறுப்பேன் என்கின்றான். இவ்விதமாக பாரதியின் அறிவுத் தாகமெடுத்து அலையும் மனதில் ஏற்பட்ட தர்க்கப் போராட்டத்தின் விளைவுகளே அவனது மேற்கூறப்பட்ட முரண்பாடுகளே தவிர வேறல்ல. இத்தகைய முரண்பாடுகள் அவனது மாபெரும் மேதைமையின் வளர்ச்சிப் படிக்கட்டுக்களே.

'பதிவுகள்' செப்டம்பர் 2003 இதழ் 45 [ 'மொறட்டுவைப் பல்கலைக்கழகத் தமிழ்ச் சங்க வெளியீடான 'நுட்பம்' - 1981 ' இதழில் வெளியான எனது 'பாரதி கருத்துமுதல்வாதியா? அல்லது பொருள்முதல்வாதியா' என்னும் கட்டுரையின் இன்னுமொரு வடிவம். ]

நன்றி*:* பதிவுகள், நுட்பம், திண்ணை

## 4. பாரதியும், ஐரோப்பிய  பெண்களும், கட்டுப்பாடற்ற காதலும்

மகாகவி பாரதியார்ஒரு சில ஆய்வாளர்கள் பாரதி ஐரோப்பியப் பெண்களை விடுதலை பெற்ற பெண்களாகக் கருதியதாகவும் அதன் மூலம் அவனால் பால் கவர்ச்சியையே விற்பனைப் பண்டமாகப் பயன்படுத்தும் முதலாளித்துவத்தை அறிய முடியவில்லையென்றும் கருதுகின்றார்கள். இது மிகவும் தவறான கூற்று. உண்மையில் பாரதி அப்படித்தான் கருதியிருந்தானாவென்றால் அதுதானில்லை. அவனது 'மாதர்' தொகுதியிலுள்ள 'நவீன ருஷ்யாவில் விவாக விதிகள்' என்ற கட்டுரை இதனைத்தான் விளக்கி நிற்கின்றது.

"ஆண்,பெண் இருபாலாரும் பரிபூர்ண சமத்துவ நிலைமையுடையோர். இங்ஙனம் இரு பாலாரும் முற்றிலும் சமானம் என்ற கொள்கைக்குப் பங்கம் நேரிடாதபடி விவாகக் கட்டைச் சமைக்க வேண்டுமென்பதே ஐரோப்பிய நாகரீகத்தின் உண்மையான நோக்கம்" என மேற்படி கட்டுரையில் ஓரிடத்தில் ஐரோப்பிய நாகரீகத்தின் சமவுரிமை பற்றிய நோக்கு பற்றிக் குறிப்பிடும் பாரதி மேற்படி கட்டுரையில் இன்னுமோரிடத்தில் பின்வருமாறு கூறுகின்றான்.

"...அவற்றைப் பார்க்கும் போது நவீன ஐரோப்பிய நாகரீகம் என்று புகழப்படும் வஸ்துவின் நியாயமான, உயர்ந்த பக்குவ நிலமை மேற்படி போல்ஷ்விக் விவாக சம்பிரதாயங்களீல் எய்தப்பட்டிருகிறதென்று தெளிவாக விளங்குகின்றது... பெண்களிற்கு விடுதலை தாங்கள் வேறுபல ஜாதியர்களைக் காட்டிலும் அதிகமாகக் கொடுத்திருப்பதே தாம் நாகரீகத்தில் உயர்ந்தவர்களென்பதற்கு முக்கியமான அடையாளங்களில் ஒன்றாமென்று ஐரோப்பியர்கள் சொல்லுகிறார்கள். அந்த வகையில் பார்த்தால், ஐரோப்பாவின் இதர பகுதிகளைக் காட்டிலும் நவீன ரஷ்யா உயர்ந்த நாகரீகம் பெற்றுள்ளதென்பது ப்ரத்யட்மாகத் தெரிகின்றது..."

இவையெல்லாம் விளக்கி நிற்பவை தானென்ன? 'ஆணிற்குப் பெண்நிகர்' என்னும் கருத்தை வலியுறுத்தும் ஐரோப்பிய நாகரீகத்தின் நோக்கினை வரவேற்றாலும், உண்மையிலேயே ஐரோப்பாவின் ஒருபகுதியான நவீன ரஷ்யாவிலேயே பெண்களின் நிலைமை சிறப்பாகவிருப்பதாக அவன் கருதுகின்றான். இதனையே மேற்படி கட்டுரையின் இறுதிப் பகுதியில் வரும் பின்வரும் பகுதி உறுதிப்படுத்துகின்றது.

"..இப்படிப்பட்ட நம்முடைய ஸ்திரிகளின் நிலைமையை நவீன ருஷ்யாவில் ஸ்திரிகளின் விடயமாக ஏற்பட்டிருக்கும் சட்டங்களுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். அப்போதுதான் நம்மை ஐரோப்பிய நாகரீகம் எந்தச் சக்தியினாலே கீழே வீழ்த்திற்றென்பதும், எந்த அம்சங்களில் நாம் ஐரோப்பிய நாகரீகத்தின் வழியைப் பின்பற்றத் தகும் என்பதும் தெளிவுறப் புலப்படுத்தும். நாம் ஐரோப்பியர் காட்டும் நெறிகளை முற்றிலுமே கைப்பற்றிக் கொள்ளுதல் அவசியமில்லை... 'ஆண்களிற்கும் பெண்களிற்கும் எவ்விதத்திலும் வேற்றுமை கிடையாது. இருபாலாரும் சமானமாகவே கருதப்படுவார்கள்' என்று ருஷியச் சட்டம் கூறுமிடத்திலே நாம் ஐரோப்பிய நாகரீகத்தின் கருத்தை அனுசரித்தல் மிக, மிக,மிக அவசரம்."

இவற்றிலிருந்து இறுதியாக நாம் வந்தடையக் கூடிய முடிவுகள் இவைதான்:

ஆண்-பெண் சமவுரிமை பற்றிய ஐரோப்பிய நாகரீகத்தின் நோக்கினை வரவேற்ற போதிலும் பாரதி ஐரோப்பாவின் இன்னுமொரு பகுதியான நவீன ருஷ்யாவிலேயே மேற்படி நோக்கம் நிறைவேற்றப் பட்டுள்ளதாகக் கருதுகின்றானே தவிர ஒரு சில ஆய்வாளர்கள் கருதுவது போல் ஐரோப்பாவின் முதலாளித்துவ நாடுகளைச் சேர்ந்த பெண்களை நிச்சயமாக பாரதி விடுதலை பெற்ற பெண்களாகக் கருதவில்லையென்பதே. மேற்படி ஆய்வாளர்கள் விட்ட பிழைக்குக் காரணம் நவீன ருஷியாவை ஐரோப்பாவின் ஒருபகுதியாகக் கருதாமல் முதலாளித்துவ ஐரோப்பாவையே ஐரோப்பாவாகக் கருதியது தான். பாரதி ருஷியாவில் நிலவிய ஆண்-பெண் சமவுரிமை சம்பந்தமான சட்டங்களைப் புகழும்போது அதனை ஐரோப்பிய நாகரீகத்தின் உயர்ந்த வடிவமாகக் கொள்வதை மேற்படி ஆய்வாளர்கள் தவறாக விளங்கி விட்டனர் போலும். அதே சமயம் பாரதி ஐரோப்பிய நாடுகளில் வாழும் பெண்களிடையே நிலவிய 'கட்டுபாடற்ற காதல்' போன்ற கோட்பாடுகளைப் பலமாக எதிர்க்கவும் தவறவில்லை. 'விடுதலைக் காத'லென்ற அவனது 'சுயசரிதை'க் கவிதையில் வரும் பின்வரும் பகுதி கூறுவதென்ன?

"காதலிலே விடுதலையென்றாங்கோர் கொள்கை
கடுகி வளர்ந்திடுமென்பார் யூரோப்பாவில்.
மாதரெல்லாம் தம்முடைய விருப்பின் வண்ணம்
மனிதருடன் வாழ்ந்திடலாம் என்பார் அன்னார்.
பேதமின்றி மிருகங்கள் கலத்தல் போலே
பிரியம்வந்தால் கலந்தன்பு பிரிந்துவிட்டால்
வேதனையொன்றில்லாதே பிரிந்து¢ சென்று
வேறொருவன் தனைக் கூட வேண்டும் என்பார்.
'வீரமிலா மனிதர் சொலும் வார்த்தை கண்டீர்.
விடுதலையாம் காதலெனில் பொய்மைக்காதல்'.

பாரதி உண்மையிலேயே ஒரு அபூர்வமான மனிதன். மனித சமுதாயத்தைப் பாதிக்கும் சகல விடயங்களைப் பற்றியும் அவன் தன் கவனத்தைத் திருப்பியிருக்கின்றான்.

இயற்கை, சமுதாயம், அரசியல், தத்துவம், பெண்விடுதலை, வறுமை, மக்கள் விடுதலையென்று அவன் பாடாத துறையென்று எதுவுமேயில்லை. பெண்களின் விடுதலைக்காகக் குரல் கொடுத்த பாரதியால் 'கட்டுப் பாடற்ற காதல்' போன்ற கருத்துக்களை ஏற்க முடியவில்லை. சமுதாயத்தில் அடிமைகளாக வாழும் பெண்கள் ஆண்களைப் போல் சமவுரிமை பெற்றவர்களாக வாழ வேண்டுமென்பதில் பாரதி தீவிரமாகயிருக்கின்றான். அவனது கவிதைகள் பால்ய விவாகம் போன்ற கொடுமைகளை எதிர்க்கின்றன. பெண்களின் கல்விக்காக அவனது கவிதைகள் குரல் கொடுக்கின்றன. விதவைகளின் மறுமணத்தை அவை வரவேற்கின்றன.அதே சமயம் 'கற்பை'ப் பற்றி வலியுறுத்தும் போது அதனை ஆண்-பெண் இருவரிற்குமே பொதுவாக வைக்கும் பாரதி , ஒருவனிற்கு

ஒருத்தியென்ற ஒருதார மணமுறையையே பலமாக ஆதரிக்கின்றான்.இதனால் தான் அவனால்

"காதலொருவனைக் கைப்பிடித்தே, அவன்
காரியம் யாவினும் கைகொடுத்து,
மாதரறங்கள் பழமையைக் காட்டிலும்
மாட்சி பெறச் செய்து வாழ்வமடி."
என்று 'பெண்கள் விடுதலைக் கும்மி'யில் கும்மியாட முடிகின்றது

நன்றி*:* பதிவுகள்*'* அக்டோபர் ***2001***

# 5. பாரதியாரின் சுயசரிதை, மற்றும் அவரது முதற் காதல் பற்றி....

மகாகவி பாரதியார் 'சுயசரிதை' என்னுமொரு கவிதை எழுதியிருக்கின்றார். பாரதியாரின் ஆளுமையை அறிந்து கொள்வதற்கு உதவும் கவிதைகளிலொன்று அவரது இந்தக்கவிதை. இதுவொரு நீண்ட கவிதை. கவிதையின் ஆரம்பம் "பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போனதுவே." என்ற பட்டினத்துப்பிள்ளையாரின் கவிதை வரிகளுடன் ஆரம்பமாகின்றது. பாரதியார் தன்னைச் சித்தர்களிலொருவராகக்கருதுபவர். சித்தர்களிலொருவரான பட்டினத்தாரின் இருப்பு பற்றிய கவிதை வரிகளுடன் ஆரம்பமாகியிருப்பது ஒன்றினை நன்கு புலப்படுத்துகின்றது. அது பாரதியாரின் இருப்பு பற்றிய சிந்தனையினைத்தான். 'பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போனதுவே' என்னும் கூற்றுக்கேற்ப அவரது வாழ்வில் கடந்து போன இழப்புகளைப்பற்றிச் சுயசரிதை விபரிக்கின்றது. நிறைவேறாத பிள்ளைக்காதல் அதாவது மானுடரின் முதற் காதல், அவரது ஆங்கிலக்கல்வி கற்றல், அவரது திருமணம் மற்றும் அவரது தந்தை வியாபாரத்தில் நொடிந்துபோய் வறுமையுறல்போன்ற விடயங்களைக்கவிதை விபரிக்கின்றது ஆனால் இந்த வாழ்வே இவ்விதமானதொரு கனவுதான் என்பதை அவர் நன்கு புரிந்திருக்கின்றார். ஆனால் அதற்காக அவர் வாழ்விலிருந்து ஓடி, ஒதுங்கிப்போய் விட்டவரா?

இவ்விதமாக இழந்தவை பற்றியெல்லாம் விபரிக்கும் அவர், ஆரம்பத்தில் 'உலகெ லாமொர் பெருங்கன வ..்துளே உண்டு றங்கி யிடர்செய்து செத்திடும் கலக மானிடப் பூச்சிகள் வாழ்க்கையோர் கனவி லுங்கன வாகும்' என்று கூறும் அவர், தன் கவிதையின் இறுதியில் உலகெ லாமொர் பெருங்கன வ..்துளே உண்டு றங்கி இடர்செய்து செத்திடும் கலக மானிடப் பூச்சிகள் வாழ்க்கையோர் கனவி னுங்கன வாகும்' என்று மானுட வாழ்வே ஒரு கனவு என்பார். ஆனால் அதற்காக , அதனை நினைத்து , நினைத்து வருந்துவதை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. 'இதற்குநான் பலநி னைந்து வருந்தியிங் கென்பயன்? பண்டு போனதை எண்ணி யென்னாவது? சிலதி னங்கள் இருந்து மறைவதில் சிந்தை செய்தெவன் செத்திடு வானடா' என்று கூறித் தன் சுயசரிதையினை முடிப்பார்.

இந்தச்சிந்தனை அவருக்கு இருந்ததனால்தான் அவர் மானுட வாழ்வே ஒரு கனவு என்று வருந்தி, ஒதுங்கி, ஓர் ஓரத்தே ஒடுங்கிக்குடங்கி இருந்து விடாமல், இயன்ற மட்டும் நூல்களை வாசிப்பதில் , இருப்பை அறிவதில், இருப்பில் நிறைந்து கிடக்கும் வறுமை, தீண்டாமை, அடிமைத்தனம், வர்க்க வேறுபாடுகள், மத வேறுபாடுகள், பெண் அடிமைத்தனம் எனப் பல்வேறு சீர்கேடுகளையும் சீரமைக்க வேண்டுமென்று சிந்தித்தார். அந்த அவரது பரந்து பட்ட சிந்தனைகளே கவிதைகளாக, கட்டுரைகளாக, வசன கவிதைகளாக, கதைகளாக , மொழிபெயர்ப்புகளாக என்று பல்வேறு வடிவங்களில் உருப்பெற்றன. அவ்விதம் உருப்பெற்றதால்தான் அவை இன்னும் மானுடர்க்கு அரிய பலவகைகளிலும் பயனுள்ளவையாக விளங்கி வருகின்றன. இன்னும் பல் ஆயிரம் வருடங்களுக்கு அவ்விதமே அவை இருக்கும்.

இந்தச்சுயசரிதையில் ஆரம்பத்தில் அவர் தன்னைப்பற்றிக்கூறியுள்ள கீழுள்ள வரிகள் என்னைக் கவர்ந்தன. அவை:

"வாழ்வு முற்றும் கனவெனக் கூறிய
மறைவ லோர்தம் உரைபிழை யன்றுகாண்;
தாழ்வு பெற்ற புவித்தலக் கோலங்கள்
சரத மன்றெனல் யானும் அறிகுவேன்;
பாழ்க டந்த பரனிலை யென்றவர்
பகரும் அந்நிலை பார்த்திலன் பார்மிசை;
ஊழ் கடந்து வருவதும் ஒண்றுண்டோ ?
உண்மை தன்னிலொர் பாதி யுணர்ந்திட்டேன்

மாயை பொய்யெனல் முற்றிலும் கண்டனன்;
மற்றும் இந்தப் பிரமத் தியல்பினை
ஆய நல்லருள் பெற்றிலன்;தன்னுடை
அறிவி னுக்குப் புலப்பட லின்றியே
தேய மீதெவ ரோசொலுஞ் சொல்லினைச்
செம்மை யென்று மனத்திடைக் கொள்வதாம்
தீய பக்தி யியற்கையும் வாய்ந்திலேன்;
சிறிது காலம் பொறுத்தினுங் காண்பமே."

வாழ்வு முற்றுங் கனவெனக்கூறிய மறையோர் கூற்று பிழையன்று காண் என்கின்றார். ஆனால் 'பாழ்கடந்த பரனிலை யென்றவர் பகரும் அந்நிலை பார்த்திலன் பார்மிசை' என்கின்றார். மேலும் 'உண்மை தன்னிலொர் பாதி யுணர்ந்திட்டேன்' என்கின்றார். மேலும் மாயை பொய்யென்பதை முற்றும் கண்ட தான் பிரம்மத்தின் இயல்பினை ஆயும் வகையிலான நல்லருளைப்பெறவில்லை என்கின்றார். அதே நேரத்தில் தேசத்தில் உள்ளவர்கள் கூறும் சொற்கள் தன்னுடைய அறிவினுக்குப்புலப்படவில்லையென்றால் அவற்றைச் 'செம்மை யென்று மனத்திடைக்கொள்ளும்' 'தீய பக்தி இயற்கையும்' வாய்த்தவனல்லன் தான் என்றும் கூறுகின்றார். அறிவினுக்குச் சரியென்று படாத ஒன்றை, அறிவினுக்குப் புலப்படாத ஒன்றினை, வெறும் பக்தியின் அடிப்படையில் தான் ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்று கூறும் பாரதியார் அவ்விதமான பக்தியைத் 'தீய பக்தி' என்றும் கூறுகின்றார். 'சிறிது காலம் பொறுத்தினுங் காண்பமே' என்கின்றார்.

மாயை விடயத்தில் பாரதியார் மிகவும் தெளிவான நிலைப்பாட்டினைக் கொண்டிருந்தார். அதனால்தான் அவர் இக்கவிதையிலும் 'மாயை பொய்யெனல் முற்றிலும் கண்டனன்' என்று கூறுகின்றார். அவரது இந்த நிலைப்பாட்டினை அவரது வேறு கவிதைகளிலும் காண முடியும். உதாரணமாக 'மாயையைப் பழித்தல்' என்னும் கவிதையைக்கூறலாம். அதிலவர் 'யார்க்கும் குடியல்லேன் யானென்ப தோர்ந்தனன் மாயையே! உன்றன் போர்க்கஞ்சுவேனோ, பொடியாக்குவேனுன்னை மாயையே' என்று கூறுவது அதனால்தான்.

பாரதியாரின் பால்ய காலத்தில் அவரையொத்த சிறுவர்கள் எல்லாரும் ஆடியும், பாடியும், ஓடியும் விளையாடிக்கொண்டிருக்கையில் , பாரதியாரால் மட்டும் தந்தையின் கண்டிப்பு அஞ்சி அவ்விதம் அச்சிறார்களைப்போல், அவர்களோடு ஆடிப்பாடிட முடியவில்லை. அதனால் தனிமையில் , தோழ்மையின்று அவர் வருந்தினார். அதனைத் தனது சுயசரிதையில் பாரதியார் பின்வருமாறு கூறுவார்:

ஆண்டோ ர் பத்தினில் ஆடியும் ஓடியும்
ஆறு குட்டையின் நீச்சினும் பேச்சினும் '
ஈண்டு பன்மரத் தேறியி றங்கியும்
என்னோ டொத்த சிறியர் இருப்பரால்;
வேண்டு தந்தை விதிப்பினுக் கஞ்சியான்
வீதி யாட்டங்க ளேதினுங் கூடிலேன்,
தூண்டு நூற்கணத் தோடு தனியனாய்த்
தோழ் மைபிறி தின்றி வருந்தினேன்.

பாரதியார் தன் சுயசரிதைக் கவிதையில் விரிவாகவே தன் பிள்ளைக்காதல் அனுபவங்களை விபரித்திருக்கின்றார். பாரதியாருக்குக் காதல் பற்றி, பெண்கள் பற்றி உயர்ந்த எண்னமுண்டு, இதனால்தான் காதலின் சிறப்பைப்பற்றி, பெண்களின் உயர்வைபற்றியெல்லாம் அவரால் சிந்திக்க முடிந்தது. அவற்றை மையமாக வைத்துக் கவிதைகள் பலவற்றை எழுத முடிந்தது. ஆனால் அவரை அந்த முதற் காதல் மிகவும் அதிகமாகவே பாதித்திருப்பதை அது பற்றி விரிவாகவே அவர் எழுதுயிருந்த கவிதை வரிகள் மூலம் அறிய முடிகின்றது. நீரெடுப்பதற்காக, நித்திலப்புன்னகை வீசி அவள் வரும் அழகினை, அவளுக்காகக் காத்திருந்து அவளழகைக் கண்டு அவளழகில் களித்திடும் மனப்போக்கினை எல்லாம் அவர் விரிவாகவே விபரித்திருக்கின்றார் தன 'சுயசரிதை'யின் 'பிள்ளைக்காதல்' என்னும் பகுதியில்:

"நீரெ டுத்து வருவதற் கவள், மணி
நித்தி லப்புன் நகைசுடர் வீசிடப்
போரெ டுத்து வருமதன் முன்செலப்
போகும் வேளை யதற்குத் தினந்தொறும்
வேரெ டுத்துச் சுதந்திர நற்பயிர்
வீழ்ந்திடச் செய்தல் வேண்டிய மன்னர்தம்
சீரெ டுத்த புலையியற் சாரர்கள்
தேச பக்தர் வரவினைக் காத்தல்போல்"

"காத்தி ருந்தவள் போம்வழி முற்றிலும்
கண்கள் பின்னழ கார்ந்து களித்திட
யாத்த தேருரு ளைப்படு மேளைதான்
யாண்டு தேர்செலு மாங்கிழுப் புற்றெனக்
கோத்த சிந்தனையோ டேகி யதில்மகிழ்
கொண்டு நாட்கள் பலகழித் திட்டனன்;
பூத்த ஜோதி வதனம் திரும்புமேல்
புலன ழிந்தொரு புத்துயிரெய்துவேன்"

ஆனால் அவரது முதற்காதலான இந்தப் பிள்ளைக்காதல் தோல்வியிலேயே முடிந்தது. பத்து வயதில் அவர் நெஞ்சை ஒருத்தி ஆட்கொண்டாள். ஆனால் அவரது தந்தையோ பன்னிரண்டு வயதில் தான் பார்த்த பெண்ணொருத்தியை அவருக்கு மணம் செய்து வைத்தார். அதனைப்பாரதியார் மேற்படி 'சுயசரிதை' கவிதையில் பின்வருமாறு விபரிப்பார்:

"ஆங்கோர் கன்னியைப் பத்துப் பிராயத்தில்
ஆழ நெஞ்சிடை யூன்றி வணங்கினன்;
ஈங்கோர் கன்னியைப் பன்னிரண் டாண்டனுள்
எந்தை வந்து மணம்புரி வித்தனன்."

இவ்விதமாகத் தான் காதலித்த பெண்ணை இழந்து, இன்னுமொருத்தியை மணம் செய்தபோதும், ஏற்கனவே தான் இன்னுமொரு பெண்ணிடம் கொண்டிருந்த காதல்தான் நிற்க வேண்டுமெனத்தான் தான் ஒருபோது தன் உள்ளத்திலெ எண்ணியவனல்லன் என்றும் கவிஞர் கூறுகின்றார்:

"மற்றோர் பெண்ணை மணஞ்செய்த போழுதுமுன்
மாத ராளிடைக் கொண்டதோர் காதல்தான்
நிற்றல் வேண்டு மெனவுளத் தெண்ணிலேன்'

இவ்விதம் ஒருத்தியை நினைத்திருக்கையில், இன்னொருத்தியை மணப்பது தவறென்றாலும், அதனை எடுத்துத் தந்தையிட கூறும் திறனிலலாயினேன் என்று கூறும் பாரதி, சுவாலைவிட்டு எரியும் காதல் தழலானது எவ்வளவு தூரம் தன் உள்ளத்தை எரித்துள்ளதென்பதையும் தான் கண்டிலேன் என்கின்றார்.

இவ்விதம் இந்தச் 'சுயசரிதை' கவிதையின் மூலம் பாரதியாரின் தனிப்பட்ட வாழ்க்கை , அது பற்றிய உணர்வுகள் பலவற்றை அறிய முடிகின்றது. அந்த வகையில் மிகவும் முக்கியத்துவம் மிக்க கவிதையாக மிளிர்கிறது .

நன்றி*: பதிவுகள், கணையாழி (மே **2020)***

## 6. எழுத்தாளர் அருண்மொழிவர்மனின் 'தாய்வீடு'க் கட்டுரையான ‘வ.ந.கிரிதரனின் கட்டுரைகள் நூலை முன்வைத்துச் சில குறிப்புகள்’ பற்றி......

எழுத்தாளர் அருண்மொழிவர்மன் அண்மையில் ஜீவநதி பதிப்பக வெளியீடாக வெளிவந்த 'வ.ந.கிரிதரனின் கட்டுரைகள்' என்னும் எனது நூல் பற்றிய விமர்சனக் குறிப்புகளை பெப்ருவரி தாய்வீடு பத்திரிகையில் எழுதியிருக்கின்றார். இது அண்மையில் 'டொராண்டோ'வில் நடந்த எனது மூன்று நூல்களின் வெளியீட்டு விழாவில் அறிமுகப்படுத்தப்பட்ட மேற்படி கட்டுரை நூல் பற்றி அவர் வாசித்த கட்டுரையின் எழுத்து வடிவம். அருண்மொழிவர்மனுக்கு எனது நன்றி.

மேற்படி விமர்சனக் குறிப்பில் அவர் பல விடயங்களைக் கேள்விக்குட்படுத்தியுள்ளார். அவை பற்றி விரிவாக விரைவில் என் பார்வையில் கருத்துகளை முன் வைப்பேன். இங்கு இக்கட்டுரைத்தொகுப்பை என் அபிமானக் கவி பாரதிக்குச் சமர்ப்பித்தது பற்றிய அவரது விமர்சனக் குறிப்புக்கான என் நிலைப்பாட்டினைத் தெளிவுபடுத்த விரும்புகின்றேன். அருண்மொழிவர்மன் இச்சமர்ப்பணம் பற்றிக் குறிப்பிடுகையில் பின்வருமாறு குறிப்பிட்டிருப்பார்:

" பாரதியின் எழுத்துகளை அரசியல் பிரக்ஞை கொண்டு , கோட்பாட்டுப் பின்னணியில் வைத்தால் குழப்பமும் தெளிவின்மையுமே ஏற்படும் . அப்படியிருக்கின்றபோது பாரதிக்கு இந்த நூலைச் சமர்ப்பணம் செய்திருக்கும் கிரிதரன் , பாரதி குறித்து ‘அவரது சமூக, அரசியல் , கலை, இலக்கியம் சார்ந்த தெளிவுமிகு எழுத்துகள் . அவற்றில் விரவிக்கிடக்கும் ஆழ்ந்த சிந்தனையின் வெளிப்பாடுகள் என்னை மிகவும் பாதித்தவை. . அவரது முரண்பாடுகளை நான் அறிவுத் தாகெமடுத்து அலையும் சிந்தைனையின் வெளிப்பாடுகளாகவே காண்கின்றேன். என்று தனது சமர்ப்பணத்தில் குறிப்பிடுவதுடன் என்னால் உடன்படமுடியவில்லை ."

'பாரதியின் எழுத்துகளை அரசியல் பிரக்ஞை கொண்டு , கோட்பாட்டுப் பின்னணியில் வைத்தால் குழப்பமும் தெளிவின்மையுமே ஏற்படும. அப்படியிருக்கின்றபோது பாரதிக்குச் சமர்ப்பணம் செய்திருப்பதைத் தன்னால் ஏற்க முடியவில்லை' என்கின்றார். பாரதியின் எழுத்துகளைக் கவனத்தில் கொள்ளும்போது அவரது காலகட்டத்தில் வைத்து அவரை எடை போடுவதே சாலச் சிறந்ததாகவிருக்கும். பாரதியின் எழுத்துகள் சமூகப்பிரக்ஞை மிக்கவை. அரசியல் பிரக்ஞை மிக்கவை. பாரதியார் சமூக, அரசியல் பிரக்ஞை மிக்கவர் என்பதால்தான் அக்டோபர் புரட்சி பற்றிப் பாட முடிந்திருக்கின்றது. மார்க்சியம் பற்றி மஞ்செஸ்டர் கார்டியனில் வெளியான ருஷ்ய சமுதாயம் பற்றி , அங்கு பெண்களின் நிலை பற்றி அவர் கவனம் செலுத்தியிருப்பது ஆச்சரியம் தருவது.

டிசம்பர் 11, 1982 பிறந்த பாரதி செப்டம்பர் 11, 1921 மறைந்து விட்டார். ருஷ்யப் புரட்சி நடந்து நான்கு வருடங்களில் மறைந்து விட்டார். இந்நிலையில் இன்று எமக்குக் கிடைப்பது போல் மார்க்சியம் பற்றிய விரிவான நூல்கள் அக்காலத்தில் பாரதிக்குக் கிடைத்திருக்கும் சாத்தியமில்லை. இருந்தாலும் அவரது தீவிர

வாசிப்பு காரணமாக அவரது கவனம் மார்க்சியம் வலியுறுத்தும் சமுதாய அமைப்பு பற்றியதற்கு முக்கிய காரணம் அவரது சமூக, அரசியற் பிரக்ஞையே. அவர் தனக்கு அக்காலகட்டத்தில் கிடைக்கப்பெற்ற தகவல்களின் அடிப்படையில் ருஷ்ய சமுதாய அமைப்பு பற்றிச் சிந்திக்கின்றார். கருத்து முதல்வாதம் , பொருள்முதல்வாதம் ஆகியவை பற்றிச் சிந்திக்கின்றார். அத்வைதம் பற்றிச் சிந்திக்கின்றார்.

இவ்விதமாகத் தனது சிந்தனையை இவ்விடயங்களில் செலுத்திய பாரதியாரின் கருத்துகளில் காணப்படும் முரண்பாடுகளை நான் அவரது அறிவித்தாகமெடுத்தலையும் சிந்தனையின் வெளிப்பாடுகளாகவே காண்கின்றேன். அவர் பொதுவுடமையை ஆதரிக்கின்றார் என்பதை அவரது எழுத்துகள் வெளிப்படுத்துகின்றன. பெண்களின் சம உரிமையினை ஆதரிக்கின்றார். இதனால்தான் ஐரோப்பிய சமுதாய அமைப்பில் பெண்களின் நிலை பற்றியெல்லாம் அவரால் கட்டுரைகளை எழுத முடிந்திருக்கின்றது. இதனால்தான் 'புதிய ருஷ்யா' என்னும் கவிதையில் "குடிமக்கள் சொன்னபடி குடிவாழ்வு/ மேன்மையுறக் குடிமை நீதி/கடியொன்றெழுந்தது பார் குடியரசென்று/உலகறியக் கூறிவிட்டார் அடிமைக்குத் தளையில்லை யாருமிப்போது /அடிமையில்லை அறிக என்றார்/இடிபட்ட சுவர் போலே கலி விழுந்தான்/ கிருதயுகம் எழுக மாதோ" என்று பாட முடிகின்றது.

என்னை அவரது இந்த அறிவுத் தேடலே மிகவும் கவர்ந்தது. அத்துடன் அவர் சமூக, அரசியற் செயற்பாட்டாளராகவும் இருந்திருக்கின்றார். இந்தியரின் தேசிய விடுதலைப் போராட்டத்திலும் பங்களித்திருக்கின்றார். தான் வாழ்ந்த காலகட்டத்தை மீறிச் சிந்தித்தவர் பாரதியார். செயற்பட்டவர் பாரதியார். அந்த அவரது ஆளுமைதான் என்னை மிகவும் கவர்ந்தது. அதற்காகவே என் கட்டுரைத் தொகுப்பினை அவருக்குச் சமர்ப்பணம் செய்தேன். மானுடர்கள் யாவருமே குறை,நிறைகளுடன் உள்ளவர்கள்தாம். கார்ல் மார்க்சும் இதற்கு விதிவிலக்கானவர் அல்லர். பாரதியாரின் குறை நிறைகளுடன் அவரது சமுதாயப் பிரக்ஞை மிக்க எழுத்துகள் காரணமாக, அவரது சமூக,அரசியற் செயற்பாடுகள் காரணமாக அவரை நான் ஏற்றுக்கொள்கின்றேன்.

இவ்விதமாகப் பாரதியின் அறிவுத் தாகமெடுத்து அலையும் மனதில் ஏற்பட்ட தர்க்கப் போராட்டத்தின் விளைவுகளே அவனது மேற்கூறப்பட்ட முரண்பாடுகளே தவிர வேறல்ல. இத்தகைய முரண்பாடுகள் அவனது மாபெரும் மேதைமையின் வளர்ச்சிப் படிக்கட்டுக்களே.

"வெ..சா, மார்க்ஸ் மீ தும் எங்கல்ஸ் மீ தும் அவர்களது கோட்பாடுகள் மீ தும் நன்கு மதிப்பு வைத்திருப்பவர் , ஆனால் அவை உருவான காலகட்டத்திற்குரியவை. , இன்று நிலவும் சமுதாயப் பொருளியிற் சூழலுக்கேற்ப அவற்றிலும் மாறுதல்கள் செய்ய்யப்படேவண்டுமென்பைதயும் அவர் வலியுறுத்துபவர் ' என்று இங்கே குறிப்பிடப்படுகின்றது . வெ.சா கொண்டாடிய, முன்மொழிந்த அழகியலும் கலை மரபுகளும் கருத்தியல் தளத்திலும் , உள்ளடக்கத்திலும் சமூகப் பிரக்ஞை இல்லாதவை. , சமூக நீ தி குறித்த அக்கைறக்கு எதிரானவை, ஆர் .எஸ் .எஸ் கருத்தியைல முன்னெடுக்கும் அரவிந்தன் நீலகண்டனைக் கொண்டாடவும்

முடிந்தது . வெங்கட் சாமிநாதனிடம் ஆழமாகக் குடிகொண்டிருந்த திராவிடம் / மார்க்சிசம் மீதான வெறுப்பு அல்லது ஒவ்வாமை அரசியலின் பின்னணியே அவரது மதிப்பீடுகளிலும் வெகுவாகத் தாக்கம் செலுத்தியது."

இவ்விதமும் மேற்படி கட்டுரையில் அருண்மொழிவர்மன் கூறியிருக்கின்றார். மேற்படி எனது கூற்றுக்கு மறுப்புத்தெரிவிக்கையில் அருண்மொழிவர்மன் வெங்கட் சாமிநாதனின் எழுத்துகளை ஆதாரங்களாக முன்வைத்து தர்க்கம செய்திருக்கவேண்டும். அப்படிச் செய்யாமல் பொதுவாகக் கூறிச் செல்கின்றார். இப்பொழுது நான் ஏன் இவ்விதமான வெங்கட் சாமிநாதன் பற்றிய முடிவுக்கு வந்தேன் என்பதை வெங்கட் சாமிநாதனின் எழுத்துகளை ஆதாரங்களாக முன் வைத்து எடுத்துக்காட்டலாமென்று நினைக்கின்றேன். மேற்படி எனது கட்டுரைத் தொகுப்பிலுள்ள அருண்மொழிவர்மன் குறிப்பிடும் இக்கட்டுரையிலேயே விரிவாக எடுத்துக் காட்டியிருக்கின்றேன்.

'வெ..சா, மார்க்ஸ் மீ தும் எங்கல்ஸ் மீதும் அவர்களது கோட்பாடுகள் மீ தும் நன்கு மதிப்பு வைத்திருப்பவர் , ஆனால் அவை உருவான காலகட்டத்திற்குரியவை , இன்று நிலவும் சமுதாயப் பொருளியிற் சூழலுக்கேற்ப அவற்றிலும் மாறுதல்கள் செய்ய்யப்படேவண்டுமென்பைதயும் அவர் வலியுறுத்துபவர் என்னும் எனது கூற்றுக்கு ஆதாரங்களாக நான் முன்வைத்திருக்கும் வெ.சா.வின் கூற்றுகள் வருமாறு:

1. 'மார்க்சின் முடிவுகள், மனித சிந்தனை வளத்திற்கு அளித்த பங்கு உண்மையிலேயே அதிகம்தான்' என்று வெ.சா அவரது 'விவாதங்கள், சர்ச்சைகள்' தொகுப்பு நூலில் பக்கம் 88இல் குறிப்பிட்டிருக்கின்றார்.

2. 'அவர்களது மேதைமையையோ, புரட்சிகரமான சிந்தனைகளையோ குறை கூறுவதாகாது. அவர்கள் காலத்தில் அவர்களின் எதிராளிகளின் கருத்து நிலையை அறிந்து அதற்கு எதிராக வாதாடியவர்கள். அவர்கள் காலம் மாறி விட்டது. கருத்து நிலைகள் மாறி விட்டன. மார்க்ஸ்-எங்கெல்ஸின் வாதங்கள் இன்று நமக்கு உதவுவதில்லை... லெனினோ, ஸ்டாலினோ மார்க்ஸ்-எங்கெல்ஸின் கருத்துகளை அவர்கள் அளித்த ரூபத்தில் ஏற்றுக்கொள்ளவில்லை. இன்றைய சோவியத் ரஷ்யாவும் அப்படியே ஏற்றுக்கொள்ளவில்லை. மா-ஸே-துங்கும் ஏற்றுக்கொள்ளவில்லை' ( விவாதங்கள், சர்ச்சைகள்'; பக்கம் 80)

3. '19-11ம் நூற்றாண்டில் முதலாளித்துவ வர்க்கம் இருந்த திசையைச் சரியாகக் கணித்துத்தான் மார்க்ஸும் எங்கெல்ஸும் தங்கள் சித்தாந்த பீரங்கிகளைக் குறிபார்த்துக் கொடுத்துள்ளார்கள். முதலாளித்துவம் அந்த இடத்தை விட்டு நகர்ந்துவிட்டது. அதற்கேற்ப உங்கள் பீரங்கிகளின் குறியையும் மாற்றிக்கொள்ள நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். மார்க்ஸும் எங்கெல்ஸும் குறிவைத்துக் கொடுத்த இடத்தையே சுட்டுக்கொண்டிருப்பதால்தான் உலகம் முழுதும், எங்கிலும் இருக்கும் முதலாளித்துவத்தை நீங்கள் எதுவும் செய்ய முடியவில்லை' (விவாதங்கள் சர்ச்சைகள்; பக்கம் 80)

மேலே நான் சுட்டிக்காட்டியுள்ள மார்க்சியம் பற்றிய வெங்கட் சாமிநாதனின் கூற்றுகள் 'வெ..சா, மார்க்ஸ் மீ தும் எங்கல்ஸ் மீ தும் அவர்களது கோட்பாடுகள் மீ தும் நன்கு மதிப்பு வைத்திருப்பவர் , ஆனால் அவை உருவான காலகட்டத்திற்குரியவை , இன்று நிலவும் சமுதாயப் பொருளியிற் சூழலுக்கேற்ப அவற்றிலும் மாறுதல்கள் செய்யப்படேவண்டுமென்பைதயும் அவர் வலியுறுத்துபவர்' என நான் என் கட்டுரையில் குறிப்பிட்டுள்ள என் கருத்துகளுக்கு ஆதாரங்கள். இவற்றின் அடிப்படையில்தான் நான் வெ.சா.வின் மார்க்சியம் பற்றிய முடிவுகளுக்கு வந்துள்ளேன். அருண்மொழிவர்மன் தன் கருத்துகளுக்கு ஆதாரங்களாக இவற்றை மறுக்கும் வெ.சா.வின் கூற்றுகளை முன் வைப்பது பொருத்தமாகவிருக்கும்.

அடுத்து 'வெ.சா கொண்டாடிய, முன்மொழிந்த அழகியலும் கலை மரபுகளும் கருத்தியல் தளத்திலும் , உள்ளடக்கத்திலும் சமூகப் பிரக்ஞை இல்லாதவை. என்றும் அவர் குறிப்பிடுகின்றார். இதனையும் என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது. இவ்விதமான கருத்துடையவராக அவர் இருந்திருந்தால் மார்க்சியரான ஓவியர் தாமோதரனின் படைப்புகளைக் கலைத்துவம் மிக்க படைப்புகளாகக் கண்டிருக்க முடியாது. தாமோதரனுடன் மார்க்சியம் பற்றி விவாதித்தாகத் தனது கட்டுரைகளில் குறிப்பிட்டிருக்கின்றார் வெ.சா. கம்யூனிஸ்ட் நாடாகவிருந்த செக்கோஸ்லோவேகியாவிலிருந்து உருவான ஓவியங்களைக் கலைத்துவம் மிக்க படைப்புகளாகக் கண்டிருக்க முடியாது.

'இன்னமும் குறிப்பாக, மிலாஸ் போர்மன் என்ற பெயரைக் கவனித்தீர்களானால் இன்னுமொன்று விளங்கும். மிலாஸ் போர்மன், கம்யூனிஸ்டுகள் அரசு செலுத்தும் செக்கோஸ்லோவேகியாவிலிருந்து வந்தவர். அங்கு இருந்தவரின் அவரது படைப்புகள் , கலைப்படைப்புகளாக இருந்தன.' (விவாதங்கள் சர்ச்சைகள்; பக்கம் 73)

எனது விஷ்ணுபுரம் நாவல் பற்றிய கருத்துகளைப் பற்றிய தனது கருத்தில் அருண்மொழிவர்மன் பின்வருமாறு கூறுகின்றார்:

"இதுபோல விஷ்ணுபுரம் பற்றி எழுதும்ேபாது ‘ஜெயமோகனின் விஷ்ணுபுரம் , இருப்பு பற்றிய ஞானத்தேடல் தானென்று அவர் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளபோது , அந்த ஞானத்தேடலுடன் ஒப்பிடும்போது வெகு சாதாரண விடயங்களைப் பெரிசு ‘இல்லை இந்த அற்ப விடயங்கைளத்தான் இந்நாவல் கூறுகின்றது ’ எனச் சிலர் வலிந்து பொருள் கூற முனைவதை என்னெவன்பது . அது மூன்றாண்டுகளாக அலைந்து திரிந்த ஜெயமாகனின் தேடலைினக் கொச்சைப்படுத்துவதாகும் ’ என்பதைப் படிக்கின்றேபாது அதிர்ச்சியே ஏற்படுகின்றது. முதலில் இப்படியான வாதம் வாசகரின் சுதந்திரத்துக்கும் வாசிப்புக்கும் தடையாக இருக்கின்றது . அதற்கு மேலாக, ஜெயேமாகனின் மூன்றாண்டு உழைப்பு , ஞானத்தேடல் என்பவற்றை ‘சலுகைகளாக’ அல்லது கேடயங்களாகப் பயன்படுத்தி ஜெயேமாகனின் எழுத்துகள் / விஷ்ணுபுரம் எப்படி இந்துத்துவ எழுத்துகளாக சமூகநீதிக்கு எதிரானைவயாக இருக்கின்றன என்கிற விமர்சனங்கைள / குரல்களை நிராகரிக்கின்றன."

முதலில் ஜெயமோகனின் விஷ்ணுபுரம் எப்படி இந்த்துவ எழுத்துகளாக , சமூக நீதிக்கு எதிரானவையாக இருக்கின்றன என்கிற விமர்சனங்களை, குரல்களை நிராகரிக்கின்றன என்று கூறுகையில் அந்த விமர்சனங்களை, குரல்களை அருண்மொழிவர்மன் இங்கு பட்டியலிட்டிருக்க வேண்டும். அவர் விஷ்ணுபுரம் நாவலில் கண்ட கருத்துகளை முதலில் குறிப்பிட்டிருக்க வேண்டும். அதன் பின்னர் அவற்றுக்கு வலுச்சேர்ப்பதற்காக ஏனையவர்களின் விமர்சனக் கருத்துகளைத் துணைக்கு அழைத்திருக்க வேண்டும். அவற்றைச் செய்யாமல் பொதுவாக இவ்விதம் கூறுவது ஏற்கும்படியாக இல்லை.

ஃபியதோர் தத்யயேவ்ஸ்கியின் 'குற்றமும் தண்டனையும்' மகத்தான உலக நாவல்களில் முதல் வரிசையில் இருக்கும் நாவல்களில் ஒன்று. டால்ஸ்டாயின் 'புத்துயிர்ப்பு' நாவலும் , என்னைப்பொறுத்தவரையில் , இத்தகைய நாவல்களில் ஒன்றே. இவ்விரண்டு நாவல்களுமே பல இடங்களில் பொதுவான அம்சங்களைக் கொண்டிருக்கின்றன. செய்துவிட்ட குற்றச் செயல்களுக்காக மனம் வருந்தும் கதாநாயகர்களை வைத்துப் பின்னப்பட்ட நாவல்களிவை. இவற்றின் முடிவுகளும் ஒரே மாதிரியானவை. மனிதரின் சகல பிரச்சனைகளுக்கும் தீர்வு தரக்கூடியது மதமே என்று போதிக்கும் முடிவுகளைக் கொண்ட நாவல்கள் இவை. ஆனால் அம்முடிவுகளைக் கொண்டு இவர்களை மதவாதிகளாக மட்டம் தட்டி, பிற்போக்குவாதிகளாக்கி, மேற்படி மகத்தான நாவல்களை யாரும் ஒதுக்கி விடுவதில்லை.

நாவல்கள் எவ்விதம் உயிர்த்துடிப்புடன் உருவாக்கப்பட்டுள்ளன, அவை வெளிப்படுத்தும் அக்காலகட்ட ருஷ்ய சமுதாய அமைப்பு, அதன் சமூக, அரசியல் மறும் பொருளாதார நிலை, அவை மானிடர்மீது ஏற்படுத்தும் பல்வகையான தாக்கங்கள், உளவியல்ரீதியிலான தாக்கங்கள் உட்பட, நடை, உரையாடல்கள், கதைப்பின்னல், இயற்கை வர்ணனை எனப் பல்வேறு விடயங்களைக் கவனத்திலெடுக்கையில் மேற்படி நாவல்களின் முடிவுகள் வற்புறுத்தும் மதத்தீர்வை யாரும் பொருட்படுத்துவதில்லை.

இதுபோல்தான் பாரதியாரின் எழுத்துகளும், சக்தியை, கணபதியை என்று அவர் பாடிய பக்திப்பாடல்களை வைத்து அவர் எழுத்துகளை மதிப்பிடுவதில்லை. தேசிய , வர்க்க விடுதலை, பெண் உரிமை, சமூகத்தில் நிலவிய மூட நம்பிக்கைகளுக்கெதிராக ஒலித்த அவரது குரல் , இருப்பு பற்றிய தேடல், பாவித்த மொழியழகு எனப் பல்வேறு விடயங்களைக் கவனத்திலெடுத்தே அவரை அணுகுகின்றோம். இவ்விதமே எழுத்தாளர் ஜெயமோகனையும் நான் அணுகுகின்றேன். அவர் எழுத்துகளில் ஒலிக்கும் ஓரம்சத்தை மட்டும் வைத்து நான் அவரை அணுகுவதில்லை.

மேற்படி விஷ்ணுபுரம் நாவல் பற்றிப் பலருக்குப் பல்வேறு கருத்துகள் இருக்கலாம். என் கருத்துகளை நான் எழுதினேன். என்னைப்பொறுத்தவரையில் அந்நாவல் வெளிப்படுத்தும் தத்துவங்கள் பற்றிய தர்க்கங்கள் முக்கியமானவை. அத்தர்க்கங்கள் அவரது ஞானத்தேடலை வெளிப்படுத்துபவை.
அருண்மொழிவர்மன் ஏன் விஷ்ணுபுரம் நாவல் இந்துத்துவ எழுத்தாக,

சமூகநீதிக்கு எதிரானதாக இருக்கின்றது என்பது பற்றிய அவரது கருத்துகளை , அவர் குறிப்பிடும் ஏனைய விமர்சனக் குரல்களுடன் அறியத்தந்தால் அது பற்றி மேலும் தர்க்கிப்பதற்கு உதவியாகவிருக்கும்.

அருண்மொழிவர்மனின் எதிர்வினையின் அடிப்படையில் இத்தர்க்கம் தொடரும்.

நன்றி*:* பதிவுகள்

## 7. எழுத்தாளர் அருண்மொழிவர்மனின் எதிர்வினையும் அதற்கான என் பதிலும்...

எழுத்தாளர் அருண்மொழிவர்மன் அவரது 'வ.ந.கிரிதரன் கட்டுரைகள்' என்னும் என் கட்டுரைத்தொகுதி பற்றி எழுதிய விமர்சனத்துக்கு நான் எழுதிய எதிர்வினைகளுக்குப் பதிலளித்து இன்னுமோர் எதிர்வினையொன்றினை ஆற்றியிருந்தார். நான் என் முதல் எதிர்வினையில் பாரதியாரை அவரது ஆன்மீகக் கருத்துகளூடு, அவரது வர்க்க விடுதலை, பெண் விடுதலை, வர்ண விடுதலை, மானுட விடுதலை, இருப்பு பற்றிய தேடல் போன்ற நிலைப்பாடுகளை அணுகுபவன் என்றும், அவனது முரண்பாடுகள் அவனது அறிவுத்தாகமெடுத்தலையும் விளைவுகள் என்றும் குறிப்பிட்டிருந்தேன். அதனாலேயே என் நூலை என்னை மிகவும் பாதித்தவர்களில் ஒருவரான அவருக்குச் சமர்ப்பித்தேன் என்பதையும் எடுத்துரைத்திருந்தேன்.

இதற்கான தனது இரண்டாவது எதிர்வினையில் அருண்மொழிவர்மன் பாரதியாரின் இன்னுமொரு கட்டுரையில் பின்வருமாறு கூறியிருப்பார்: "பாரதி “இந்தியா”வில் எழுதி பின்னர் பாரதி விஜயா கட்டுரைகள் என்ற தொகுப்பில் இடம்பெற்றுள்ள “காலாடியில் பிரதிஷ்டை” என்ற கட்டுரை பாரதியின் நிலைப்பாடுகளைச் சுட்டிக்காட்டுகின்றது.  பெப்ரவரி 26, 1910 இல் எழுதப்பட்ட இந்தக் கட்டுரையில் பாரதி குறிப்பிடும் "ஸ்ரீ சிருங்ககிரி ஸ்வாமி உபன்னியாசத்தில் கேட்டுக்கொண்டது போல் நாமெல்லாரும் ஸநாதன தர்மத்தை ஸ்தாபிக்க பெருமுயற்சி செய்யவேண்டும்.” என்னும் கூற்றை எடுத்துக்காட்டி 'சனாதனத்தைக் காக்கவேண்டும், ஆரிய தர்மத்தைக் காக்கவேண்டும் என்கிற வர்ண உணர்வு கொண்ட மதவாதியாகவே பாரதியை இந்தக் கட்டுரை வெளிப்படுத்துகின்றது.' என்று கூறுகின்றார்.

இங்கு தற்போது நாம் நடைமுறையில் இருக்கும் வர்ணப்பிரிவுகளைப்பின்பற்றும் , அதாவது பிறப்பால் ஒருவரது வர்ணம் தீர்மானிக்கப்பட்டு விடுகிறது என்னும் அடிப்படையில் போதிக்கும் மதவாதிகளில் ஒருவராக அருண்மொழிவர்மன் பாரதியாரை இனங்காண்கின்றார். இங்குதான் அருண்மொழிவர்மன் தவறி விடுவதாகக் கருதுகின்றேன்.

பாரதியார் வேதாகமங்களைக் கற்றவர். அவற்றின் அடிப்படையில் அவரது ஆன்மீகக்கருத்துகளிருந்தன. பாரதியார் வர்ண விடுதலைக்கெதிராகப் பாடியவர். மதங்களில் நிலவும் மூடக் கருத்துகளை எதிர்த்தவர். இந்நிலையில் அவர் எவ்விதம் இவ்விதம் பிறப்பால் ஒருவரின் வர்ணப்பிரிவுகளைப் போதிக்கும் வர்ணப்பிரிவுகளை ஆதரிக்கலாம் என்றொரு கேள்வி பலருக்கும் எழலாம். அருண்மொழிவர்மனுக்கும் எழுந்தது. நியாயமானது. ஆனால் பாரதியார் தான் கற்ற வேத நூல்களிலிருந்து அறிந்த , புரிந்த சனாதனத் தர்மம் என்பது பிறப்பால் ஒருவரின் வர்ணத்தைத் தீர்மானித்து விடுகின்றது என்பது அல்ல என்பதை அருண்மொழிவர்மன புரிந்துகொள்ளத்  தவறியதே அவரது பாரதி பற்றிய நிலைப்பாட்டுக்குக் காரணம்.

பாரதியார் அறிந்த சனாதன தர்மத்தில் குறிப்பிடப்படும் வர்ணப்பிரிவுகள் என்பது ஒருவரின் பிறப்பால் ஏற்படுவதல்ல. வர்த்தகர், கல்விமான்கள், தொழிலாளர்கள், போர்வீரர்கள் எனப் பிரிவு பட்டிருக்கும் நான்கு வர்ணப்பிரிவுகள் பற்றி பாரதியார் 'சமூகம்- நாற்குலம்' என்னும் கட்டுரையில் திலகரின் கூற்றை எடுத்துக்காட்டி பின்வருமாறு கூறுவார்:

" திலகர் சொன்னார்:- "பழைய காலத்து நான்கு வர்ணப் பிரிவுக்கும் இப்போதுள்ள ஜாதி வேற்றுமைக்கும் பேதமிருக்கிறது. திருஷ்டாந்தமாக, இப்போது ஒரே பந்தியில்இருந்துண்ண விரும்பாதிருத்தல் சாதிப் பிரிவுக்கு லக்ஷணம் என்று பலர் நினைக்கிறார்கள். பழைய காலத்து விஷயம் இப்படியில்லை.

"நான்கு வர்ணங்கள் பிறப்பினாலேயல்ல, குலத்தாலும் தொழிலாலும் உண்டாயின" என்று கீதை சொல்லுகிறது. அதன்படி பார்த்தால் இப்போது நமக்குள் க்ஷத்திரியர்எங்கே இருக்கிறார்கள்?நம்மைக் காப்போர் ஆங்கிலேயர்கள்;ஹிந்துக்களுள் க்ஷத்திரியரைக் காணோம். இந்தக் கான்பூர் பெரிய வியாபார ஸ்தலம். ஆனால், இங்குள்ள வைசியர் பிற தேசத்து வியாபாரிகளின் வசத்தில் நிற்கிறார்கள். செல்வத் தலைமை நமக்கில்லை. இப்போதுள்ள பிராமணர் தாமேதேசத்தின் மூளையென்று சொல்லுகிறார்கள். ஆனால், இந்த மூளை மண்ணடைந்துபோய், நாம் வெளியிலிருந்து அதிக மூளை இறக்குமதி செய்யும்படி நேரிட்டிருக்கிறது."

"நான்கு வர்ணத்தாருக்குரிய நால்வகைத் தொழில்களும் ஹிந்துக்களல்லாத பிறர்நியமனப்படி நடக்கின்றன. நாமெல்லோரும் தொண்டர் நிலையிலே இருக்கிறோம்.தேசம் கெட்ட ஸ்திதியிலே இருக்கிறது. உங்களுடம்பில் பிராமணரத்தம் ஓடுவதாகவும் க்ஷத்திரிய ரத்தம் ஓடுவதாகவும் நீங்கள் வாயினால் சொல்லலாம். ஆனால், உங்களுடைய வாழ்க்கை அப்படி இல்லை."

'சமூகம் - பிராமணன் யார்' என்னும் கட்டுரையில் பின்வருமாறு கூறுவார்;

" பிறப்புப் பற்றி பிராமணன் என்று கொள்வோமென்றால்,அதுவுமன்று. மனிதப்பிறவியற்ற ஐந்துக்களிடமிருந்துகூடப் பல ரிஷிகள் பிறந்ததாகக் கதைகளுண்டு. ரிஷ்யசிருங்கர் மானிலிருந்தும்,ஜாம்பூகர் நரியிலிருந்தும், வால்மீகர் புற்றிலிருந்தும், கௌதமர் முயல் முதுகிலிருந்தும் பிறந்ததாகக் கதை கேட்டிருக்கிறோம். அது போக, வஸிஷ்டர் ஊர்வசி வயிற்றில் பிறந்தவர்; வியாஸர் மீன் வலைச்சியின் வயிற்றில் பிறந்தவர்; அகஸ்தியர் கலசத்திலே பிறந்ததாகச் சொல்லுவார்கள்."

இக்கட்டுரையில் மேலும் அவர் மானுட சமூகத்துக்குத் தொழில் அடிப்படையிலான நான்கு பிரிவுகளும் தேவை என்று கருதுகின்றார் அவர் என்பதைத்தான் அறிய முடிகின்றது. இப்பிரிவுகள் எல்லாம் பிறப்பால் ஏற்படுவதல்ல. யாரும் மேற்படி பிரிவுகளுக்கேற்ற விடயங்களில் பயிற்சி எடுத்து அப்பிரிவுகளில் குறிப்பிடப்படும் வர்ணத்துக்குரியவராக ஆகலாம். இதனைத்தான் வேத நூல்கள் கூறுகின்றன. இப்பிரிவுகளை உள்ளடக்கிய சனாதன தர்மத்தைத்தான் பாரதியார் நம்புகின்றார். யாரும் பிராமணன் ஆகலாம், யாரும்

சத்திரியன் ஆகலாம், யாரும் வர்த்தகன் ஆகலாம்., யாரும் சூத்திரன் அதாவது தொழிலாளி ஆகலாம். நாம் வாழும் இன்றுள்ள மானுட சமூகத்தில் இவ்விதம்தானே பிரிவுகள் உள்ளன. இவற்றைத்தான் வேத நூல்கள் கூறுகின்றன என்று பாரதியார் கருதுகின்றார். மேற்படி 'சமூகம் - பிராமணன் யார்' என்னும் கட்டுரையில் வரும் கீழ்வரும் கூற்றும் பாரதியாரின் இத்தகைய மனநிலையையே வெளிப்படுத்துகின்றன:

"பிராமணராக வேண்டுவோர் மேற்கூறப்பட்ட நிலைமையைப் பெற முயற்சி செய்யக்கடவர். க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் முதலிய மற்ற லௌகிக வர்ணங்களுக்கும்இதுபோலவே தக்கவாறு லக்ஷணங்கள் அமைத்துக் கொள்க. அவ்வவ்விலக்கணங்கள் பொருந்தியவர்களே அவ்வவ் வருணத்தின்ரென்று மதிக்கத்தக்கவர்கள், அந்த. இலக்கணங்கள்இல்லாதவர்கள் அவற்றையடைய முயற்சி செய்யவேண்டும். போலீஸ் வேவுத்தொழில் செய்பவன் பிராமணன் ஆகமாட்டான்.குமாஸ்தா வேலை செய்பவன் க்ஷத்திரியன் ஆகமாட்டான். சோம்பேறியாக முன்னோர் வைத்துவிட்டுப்போன பொருளை யழித்துத் தின்பவன் வைசியன் ஆகமாட்டான். கைத்தொழில்களையெல்லாம் இறக்கக் கொடுத்துவிட்டுச் சோற்றுக்குக் கஷ்டமடைவோர் சூத்திரர் ஆகமாட்டார்கள். இவர்களெல்லாம் மேம்பாடுடைய ஆரிய வர்ணங்கள் நான்கிற்கும் புறம்பாகிய நீசக் கூட்டத்தார். நமது தேசம் முன்போலக்கீர்த்திக்கு வரவேண்டுமானால், உண்மையான வகுப்புகள் ஏற்படவேண்டும். பொய்வகுப்புகளும் போலிப் பெருமைகளும் நசிக்க வேண்டும். இதுநம்முடைய வேத சாஸ்திரங்களின் கருத்து."

பாரதியார் காணும் சனாதனதர்ம வர்ணப்பிரிவுகள் வேறு. இன்றுள்ள மானுட சமூகத்தில் அருண்மொழிவர்மன் காணும் சனாதனத் தர்ம வர்ணப்பிரிவுகள் வேறு. இதனை உணராதனால்தான் அருண்மொழிவர்மன் பாரதியாரை இன்றுள்ள தவறான சனாதன தர்ம வர்ணப்பிரிவுகளின் அடிப்படையில் இனங்காண்கின்றார். அதிர்ச்சி அடைகின்றார்.

இவ்விடயத்தில் பாரதியாரை விரிவாக ஆராய வேண்டும் என்பதே என்னுடைய நிலைப்பாடு. இவ்விதமான பாரதியாரின் சிந்தனை வெளிப்பாடுகள் எல்லாம் பாரதியாரின்  மீதான என் மதிப்பை இன்னும் அதிகரிக்கவே செய்கின்றன.

நன்றி*:* பதிவுகள்

## 8. என்னை ஆட்கொண்ட மகாகவி!

தமிழ் இலக்கிய உலகில் என்னை ஆட்கொண்டவர்களில் முதலிடத்தில் இருப்பவர் மகாகவி பாரதியார். இவருடனான தொடர்பு ஏற்பட்டபோது எனக்குப் பதினொரு வயது. அப்பா வாங்கித் தந்திருந்த மகாகவி பாரதியார் கவிதைகள் நூலின் மூலம் அத்தொடர்பு ஆரம்பமானது. இன்று வரை அது நீடிக்கின்றது. நான் எங்கு சென்றாலும், எங்கு வாழ்ந்தாலும் என் மேசையில் பாரதியாரின் கவிதைத் தொகுப்புமிருக்கும். அவ்வப்போது தொகுப்பைப் பிரித்து ஏதாவதொரு அவரது கவிதையை வாசிப்பது என் வழக்கம்.

எப்பொழுதுமே நான் பாரதியாரை நினைத்து வியப்பதுண்டு. குறுகிய அவரது வாழ்வில் அவர் சாதித்தவைதாம் எத்தனையெத்தனை! அவரது கவிதை வரிகள் மானுடரின் குழந்தைப்பருவத்திலிருந்து  முதிய பருவம் வரையில் வாழ்க்கைக்கு வழிகாட்டக் கூடியவை. குழந்தைகளுக்கு அவரது வரிகள் இன்பமளிப்பவை. இளம் பருவத்தினருக்கு அவரது கவிதைகள் வடிகால்களாக இருப்பவை. சமுதாயச் சீர்கேடுகளுக்கெதிராக, அந்நிய ஆதிக்கத்துக்கெதிராகப் போராடுபவர்களுக்கு அவரது கவிதைகள் உத்வேகமளிப்பவை. தத்துவ விசாரங்களில் மூழ்கி மானுட இருப்புப் பற்றிச் சிந்திப்பவர்களுக்கு அவரது கவிதைகள் தெளிவையும், தேடல் மீதான ஆர்வத்தை மேலும் தொடர்வதற்கு ஊக்கமளிப்பவை. இயற்கையைச் , சூழலை , சக உயிர்களை நேசிப்பவர்களுக்கு அவரது கவிதைகள் மகிழ்ச்சியைத் தருபவை.

அவரது கவிதை வரிகள் பல மனத்தில் நிலைத்து நிற்கக்கூடியவை. இதுவரை வெளியான தமிழ்ச் சஞ்சிகைகள் பலவற்றின் தாரக மந்திரமாக இருப்பவை அவரது கவிதை வரிகள். திரைப்படங்கள், கலை நிகழ்வுகள், மெல்லிசை, கர்நாடக  இசைக்கச்சேரிகள் பலவற்றில் அதிகம் பாடப்பட்டவை அவரது வரிகளாகக்த்தானிருக்க முடியும்.

குறை , நிறைகளோடு அவரது எண்ணங்களை, அவரது வாழ்வு அனுபவங்களை, இருப்பு பற்றிய அவரது  தேடலினை அவரது எழுத்துகளில் நாம் தரிசிக்கலாம். தான் வாழ்ந்த சூழலை மீறிச்சிந்தித்த மாமனிதர் அவர். அதனால்தான் அவரால் அடிமைப்பட்டுக் கிடந்த சமுதாயத்திலிருந்து தளைகள் நீங்கிய சமத்துவ சமுதாயத்தைப்பற்றி எண்ணி ஆடிப்பாடிட முடிந்தது. வீட்டுக்குள் முடக்கி வைக்கப்பட்டிருந்த பெண்களை விடுதலைபெற்ற பெண்களாக, பல்துறைகளிலும் சாதனை புரிபவர்களாக எண்ணி ஊக்குவிக்க, வாழ்த்திட முடிந்தது. எல்லைகளைக் கடந்து துன்பத்தில் உழன்று கிடந்த சக மானுடர்களைப்பற்றி, சக உயிர்களைப்பற்றி, அவர்கள்தம் , அவற்றின் துயரங்களைப்பற்றிப் பாடிட முடிந்தது; பகிர்ந்திட முடிந்தது.

ஊடக வியலாளராக, தேசிய , வர்க்க விடுதலைப் போராளியாக, கவிஞராக, கதாசிரியராக, பெண்ணுரிமைவாதியாக, இருப்பு பற்றிய தேடல் மிகுந்த தத்துவவாதியாக, இயற்கையை நேசிப்பவராக, பத்திரிகையாசிரியராகத் தன் எழுத்துகள் மூலம், வாழ்க்கை மூலம் என்னைக் கவர்ந்த , பாதித்த மகாகவி பாரதியாரின் எழுத்துகள், அவர் பற்றிய சிந்தனைகள் என்   இருப்பு உள்ளவரை

எனக்கிருக்கும். அவை என்னை எப்பொழுதுமே வழி நடத்திச் செல்லும். சோர்ந்திருக்கும் தருணங்களில் அவை எனக்குப் புத்துணர்ச்சியூட்டித் தென்புற வைக்கும்.

அவர் நினைவாக ஒரு பாடல்:
நின்னைச் சரணடைந்தேன்- கண்ணம்மா
நின்னைச் சரணடைந்தேன்- கண்ணம்மா
நின்னைச் சரணடைந்தேன்!
பொன்னை உயர்வைப் புகழை விரும்பிடும்
என்னைக் கவலைகள் தின்னத் தகாதென்று
மிடிமையும் அச்சமும் மேவி என் நெஞ்சில்
குடிமை புகுந்தன, கொன்றவை போக்கென்று
தன் செயலெண்ணித் தவிப்பது தீர்ந்திங்கு
நின் செயல் செய்து நிறைவு பெறும்வண்ணம்
துன்பமினியில்லை சோர்வில்லை
சோர்வில்லை தோற்பில்லை
நல்லது தீயது நாமறியோம் நாமறியோம்
நாமறியோம்
அன்பு நெறியில் அறங்கள் வளர்ந்திட
நல்லது நாட்டுக! தீமையை ஓட்டுக!
நின்னைச் சரணடைந்தேன்- கண்ணம்மா
நின்னைச் சரணடைந்தேன்!
பொன்னை உயர்வைப் புகழை விரும்பிடும்
என்னைக் கவலைகள் தின்னத் தகாதென்று.

* முகநூற் பதிவு

## 9. பாரதியை நினைவு கூர்வோம்!

என் அபிமானக் கவிஞர்களில் முதலிடத்தில் இருப்பவர் மகாகவி பாரதியார். இதற்கு முக்கிய காரணங்களாக அவரது கவிதைகளில் விரவிக்கிடக்கும் இருப்பு பற்றிய தேடல், சிந்தனைத் தெளிவு, சமூக, அரசியற் பிரக்ஞை, தீர்க்கதரிசனம், பூவுலக உயிர்கள் மீதான கருணை, இயற்கை மீதான நாட்டம் , பெண் விடுதலைச் சிந்தனைகள், சமூக அவலங்களுக்கெகிரான அறை கூவல்; என்று பலவற்றைக் கூறலாம்.

பாரதியுடனான என் தொடர்பு என் பால்ய பருவத்தில் என் அப்பா பாரதியார் கவிதைத்தொகுதியொன்றினை வாங்கித்தந்ததுடன் ஆரம்பமாகியது. அக்காலகட்டத்தில் தமிழில் வெளியான பல வெகுசன இதழ்களை வாங்கிக்குவித்த அப்பா பாரதியார் கவிதைகள், இராஜாஜியின் 'வியாசர் விருந்து', 'சக்கரவர்த்தித் திருமகன்' , புலியூர்க் கேசிகனின் உரைகளுடன் வெளியான சங்ககால நூல்கள் எனப் பலவற்றையும் வாங்கித் தந்திருந்தார். அக்காலந்தொடக்கம் பாரதியின் கவிதைகள் என்னை ஆட்கொள்ளத்தொடங்கின. இன்றுவரை அவ்வாதிக்கம் தொடர்ந்துகொண்டேயிருக்கின்றது.

பாரதியின் கவிதைகளின் முக்கிய சிறப்புகளிலொன்று மானுடப் பருவங்கள் அனைத்துக்கும் பொருந்தும் வகையில் அவை அமைந்திருப்பதுதான். . இதுவரைக் கால என் வாழ்வின் பல்வேறு பருவங்களிலும் அவரது பல்வேறு கவிதைகள் முக்கிய இடத்தைப் பெற்றுத் திகழ்ந்திருக்கின்றன. பால்யப் பருவத்தில் பிடித்த அவரது கவிதைகள் வேறு. பதின்ம வயதுகளில் பிடித்த கவிதைகள் வேறு. இளமைப்பருவத்தில் பாதித்த கவிதைகள் வேறு. உதாரணத்துக்கு பால்ய பருவத்தில் அவரது 'குடுகுடுப்பைக்காரன்' கவிதை, 'மழை' கவிதை போன்ற கவிதைகள் பிடித்திருந்தன. பதின்ம வயதுகளிலோ 'காற்று வெளியிடைக் கண்ணம்மா' போன்ற பாடல்கள் பிடித்திருந்தன. தேசிய விடுதலைக் கவிதைகள் பிடித்திருந்தன. இளமைப்பருவத்தில் 'நீற்பதுவே. நடப்பதுவே' போன்ற தத்துவச் சிறப்பு மிக்க கவிதைகள் பிடித்திருந்தன. அதே சமயம் எப்பருவங்களிலும் வாசிப்பில் இன்பம் தருபவை அவரது கவிதைகள்.

தேசிய விடுதலையைப் பாடிய அவரது கவிதைகள் சமூக விடுதலையைப் பாடின. மானுட விடுதலையையும் பாடின. இவ்விடயங்களில் அவருக்கிருந்த தெளிவு அவரது படைப்புகள் முழுவதும் விரவிக்கிடக்கின்றது.

எனக்குப் பிடித்த பாரதியாரின் கவிதைகளிலொன்று:

சென்றதினி மீளாது,மூடரே!நீர் எப்போதும்
சென்றதையே சிந்தை செய்து
கொன்றழிக்கும் கவலையெனும் குழியில் வீழ்ந்து
குமையாதீர்!சென்றதனைக் குறித்தல் வேண்டாம்.
இன்றுபுதி தாய்ப்பிறந்தோம் என்று நீவிர்
எண்ணமதைத் திண்ணமுற இசைத்துக் கொண்டு

தின்றுவிளை யாடியின்புற் றிருந்து வாழ்வீர்;
தீமையெலாம் அழிந்துபோம்,திரும்பி வாரா.

நன்றி*:* முகநூற் பதிவு

## 10. பாரதியார் நினைவாக: பாரதியாரின் 'திக்குகள் எட்டும் சிதறி' மழைக்கவிதை!

மகாகவி பாரதியாரின் நினைவு தினம் செப்டம்பர் 11. என்னை மிகவும் பாதித்த இலக்கிய ஆளுமைகளின் முதலிடத்தில் இருப்பவர் மகாகவி பாரதியார். குறுகிய அவரது வாழ்வு மானுட உலகுக்கு ஒளி தந்ததொரு மின்னலாக அமைந்து விட்டது. என்னை அவரது சிந்தனைத் தெளிவு மிகவும் கவர்ந்தது. அவரிடம் காணப்படும் முரண்பாடுகள் கூட அவரது தேடலின் விளைவுகளே.

தேசிய விடுதலை, வர்ண விடுதலை, வர்க்க விடுதலை, பெண் விடுதலை. மானுட விடுதலை பற்றி அவருக்கு மிகுந்த தெளிவு இருந்தது. அதனையே அவரது எழுத்துகள், வாழ்க்கை ஆகியன புலப்படுத்துகின்றன. வர்ண விடுதலைக்காக ஏனைய விடுதலைகளை அவர் புறக்கணித்து விடவில்லை. வர்ண விடுதலையை , பெண் விடுதலையை வற்புறுத்திய அவர் கூடவே வர்க்க விடுதலையையும் வலியுறுத்தினார். அத்துடன் நிற்கவில்லை மானுட விடுதலையையும் முன் வைத்தார். மானுட விடுதலையை வேண்டிய அவர் அதற்காக ஏனையு விடுதலைகளைப் புறக்கணித்துப் போரிடாது ஓய்ந்திருக்கவில்லை. அனைத்து விடுதலைகளுக்காகவும் களத்தில் இறங்கிப் போராடிய சமூக, அரசியற் போராளி அவர். அவரது அந்த ஆளுமை என்னை மிகவும் கவர்ந்தது.

இவ்விதம் மானுடரின் பல்வகை விடுதலைக்காகவும் குரலெழுப்பின அவரது எழுத்துகள். அத்துடன் நின்று விடவில்லை. மானுடரின் இருப்பு பற்றிய கேள்விகளையும் எழுப்பின. நல்லதோர் உதாரணம் அவரது 'உலகத்தை நோக்கி வினவுதல்' என்னும் 'நிற்பதுவே நடப்பதுவே' என்று ஆரம்பமாகும் புகழ்பெற்ற கவிதை.

தமிழ் இலக்கியத்துக்கான அவரது பங்களிப்பும் மகத்தானது. கவிதை, சிறுகதை, வசனகவிதை , மொழிபெயர்ப்பு என அவரது பன்முகப்பட்ட பங்களிப்பு முக்கியமானது.

அவரது எழுத்துகளின் வீரியமும் முக்கியமானது. வாசிப்போரைத் தட்டி எழுப்புவன அவை. வாசிப்போருக்கு இன்பம் தருபவை அவை. வாசிப்போரைச் சிந்திக்க வைப்பவை அவை. வாசிப்போருக்கு வழிகாட்டிகளாக இருப்பவை அவை.

எனக்கு மிகவும் பிடித்த இயற்கை நிகழ்வு கொட்டும் இடித்தாளத்துடன் மின்னிப் பெய்யும் மழை. அதனை இரசிப்பதென்றால எனக்கு மிகவும் பிடிக்கும். மழை பற்றிய இரு கவிதைகள் எனக்கு மிகவும் பிடித்தவை. ஒன்று கவீந்திரனின் (அ.ந.கந்தசாமி) 'சிந்தனையும் மின்னொளியும்' , அடுத்தது மகாகவி பாரதியாரின் 'திக்குகள் எட்டும் சிதறி' .

அ.ந.க.வின் கவிதை இயற்கை நிகழ்வு கவிஞனுக்குக் கற்பிக்கும் பாடத்தைக் கவித்துவத்துடன் வெளிப்படுத்தினால், பாரதியாரின் 'திக்குகள் எட்டும் சிதறி'யோ இடியுடன் மின்னிப் பெய்யும் மழையைச் சொற்சித்திரமாக்கி உணர்வினை வசியப்படுத்தும்.

பாரதியாரின் 'மழை' கவிதை முழுமையாகக் கீழே:

திக்குகள் எட்டும் சிதறி-தக்கத்
தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட
பக்க மலைகள் உடைந்து-வெள்ளம்
பாயுது பாயுது பாயுது-தாம்தரிகிட
தக்கத் ததிங்கிடத்தோம்-அண்டம்
சாயுது சாயுது சாயுது-பேய்கொண்டு
தக்கை யடிக்குது காற்று-தக்கத்
தாம்தரிகிடத்தாம் தரிகிடத்தாம் தரிகிடத்தாம் தரிகிட
வெட்டி யடிக்குது மின்னல் கடல்
வீரத் திரைகொண்டு விண்ணை யிடிக்குது
கொட்டி யிடிக்குது மேகம்-கூ
கூவென்று விண்ணைக் குடையுது காற்று
சட்டச்சடசட சட்டச்சட டட்டா-என்று
தாளங் கொட்டிக் கனைக்குது வானம்
எட்டுத் திசையும் இடிய –மழை
எங்ஙனம் வந்ததடா தம்பி வீரா
அண்டம் குலுங்குது தம்பி-தலை
ஆயிரந் தூக்கிய சேடனும் பேய்போல்
மிண்டிக் குதித்திடு கின்றான்-திசை
வெற்புக் குதிக்குது வானத்துத் தேவர்
செண்டு புடைத்திடு கின்றார்-என்ன
தெய்விகக் காட்சியைக் கண்முன்பு கண்டோம்
கண்டோம் கண்டோம் கண்டோம்-இந்தக்
காலத்தின் கூத்தினைக் கண்முன்பு கண்டோம்

நன்றி: முகநூற் பதிவு

## இதுவரை வெளியான நூல்கள்

1. மண்ணின் குரல் (நாவல், கவிதை, கட்டுரைத் தொகுப்பு),
2. எழுக அதி மானுடா! (கவிதைத்தொகுப்பு),
3. அமெரிக்கா (நாவல், சிறுகதைகளின் தொகுப்பு),
4. நல்லூர் ராஜதானி நகர அமைப்பு (ஆய்வு)
5. மண்ணின் குரல் ( நாவல்களின் தொகுப்பு) ,
6. குடிவரவாளன் (நாவல்) ,
7.. அமெரிக்கா (நாவல், திருத்திய இரண்டாவது பதிப்பு.)
8. கட்டடக்கா(கூ)ட்டு முயல்கள் (சிறுகதைத்தொகுப்பு) ,
9> வ.ந.கிரிதரன் கட்டுரைகள் ,
10. ஒரு நகரத்து மனிதனின் புலம்பல் (கவிதைத்தொகுப்பு) ,
11. நவீன விக்கிரமாதித்தன் (நாவல்)

நல்லூர் ராஜதானி நகர அமைப்பு ஆய்வு நூல் மற்றும் இவரது சிறுகதைகள் சிங்கள மொழிக்கு எழுத்தாளர் ஜி.ஜி.சரத் ஆனந்தவினால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவரது படைப்புகள் பல அமேசன் - கிண்டில் தளத்தில் மின்னூல்களாகக் கிடைக்கின்றன.

கணையாழி (1995 - 2000 தொகுப்பு, ஞானம் சஞ்சிகையின் ' ஈழத்துப்புலம்பெயர் இலக்கியத்தொகுப்பு', ' பனியும் பனையும்' தொகுப்பு , அமரர் வெங்கட் சாமிநாதன் பற்றிய வாதங்களும், விவாதங்களும் தொகுப்பு ,'வடக்கு வாசல் 'சஞ்சிகையின் இலக்கிய மலர், ஆழி பப்ளிஷர்ஸ் வெளியிட்ட ஆண்டு 'தமிழ்க்கொடி' மலர் ஆகியவற்றில் இவரது படைப்புகள் இடம் பெற்றுள்ளன. எழுத்தாளர் சுஜாதா அறக்கட்டளையும் ஆழி பப்ளிஷர்ஸும் இணைந்து நடத்திய அமரர் சுஜாதா அறிவியல் புனைகதைப் போட்டியில் வட அமெரிக்காவுக்கான விருதினைப் பெற்ற அறிவியற் சிறுகதை 'நான் அவனில்லை'. இச்சிறுகதை ஆழி பதிப்பகம் வெளியிட்ட ‘சுஜாதா நினைவுப் புனைவு 2009’ , அறிவியற் புனைகதைத்தொகுப்பிலும் இடம் பெற்றுள்ளது. விகடனின் பவளவிழா ஆண்டில் இவரது 'பல்லிக்கூடம்' முத்திரைக் கதையாக வெளியானது.

## வெளியான அமேசன் - கிண்டில் மின்னூல்கள். இவை பதிவுகள்.காம் வெளியீடுகள்.

1. வ.ந.கிரிதரன் பாடல்கள்
2. வ.ந.கிரிதரனின் அணிந்துரைகள்
3. அமெரிக்கா!: அமெரிக்கத் தடுப்பு முகாம் அனுபவம்!
4. வ.ந.கிரிதரனின் கட்டுரைகள் (தொகுதி ஒன்று)
5. வ.ந.கிரிதரனின் 'கணையாழி'க் கட்டுரைகள்
6. ஒரு நகரத்து மனிதனின் புலம்பல்!: வ.ந.கிரிதரனின் தமிழ்க் கவிதைத் தொகுப்பு!
7. அருச்சுனனின் தேடலும் அகலிகையின் காதலும் (நாவல்)
8. அண்டவெளி ஆய்வுக்கு அடிகோலும் தத்துவங்கள்: வ.ந.கிரிதரனின் அறிவியற் கட்டுரைகள், சிறுகதைகள்
9. நவீன கட்டடக்கலைச் சிந்தனைகள்!
10.வன்னி மண்: - என் பால்யத்தின் பிரதிபலிப்பு. (நாவல்)
11. பால்ய காலத்துச் சிநேகிதி! (நாவல்)
12. நல்லூர் ராஜதானி நகர அமைப்பு (திருத்திய இரண்டாம் பதிப்பு)
13.குடிவரவாளன்: நியூயோர்க் மாநகரத் தமிழ் அகதி அனுபவம்! (நாவல்)
14. மண்ணின் குரல்: - கனடாவில் வெளியான முதலாவது தமிழ் நாவல். - (நாவல்)
15. கணங்களும் குணங்களும் (நாவல்)
16. வ.ந.கிரிதரனின் கட்டுரைகள் (தொகுதி இரண்டு)
17. இன்று புதிதாய்ப் பிறந்தேன் (வ.ந.கிரிதரன் பாடல்கள் தொகுப்பு 2

## ஆங்கில நூல்கள் (மின்னூல்களாக) - மொழிபெயர்த்தவர் - லதா ராமகிருஷ்ணன்.

1. An Immigrant  (Novel)
2. America (Novel)
3. Nallur Rajadhani City Layout

## வ.ந.கிரிதரன்



தற்போது கனடாவில் வாழ்ந்து வரும் எழுத்தாளர் வ.ந.கிரிதரன் இலங்கையைச் சேர்ந்த தமிழ் எழுத்தாளர். வவுனியா மகாவித்தியாலயம், யாழ் இந்துக்கல்லூரி ஆகிய பாடசாலைகளில் கல்வி கற்ற இவர் , மொறட்டுவைப் பல்கலைக்கழகத்தின் கட்டடக்கலைப் பட்டதாரி. "டொராண்டோ' சென்டனியல் கல்லூரியில் இலத்திரனியற் பொறியியல் துறையில் பட்டம் , தகவற் தொழில் நுட்பம் நுட்பத்துறையில் பல்வேறு கல்வித் தகைமைகளைப் பெற்றவர். இலங்கையிலிருந்த காலத்தில் தன் எழுத்துலக வாழ்வினை ஆரம்பித்த புகலிடத்தில் தொடர்ந்து எழுதி வருகின்றார். பதிவுகள் என்னும் இணைய இதழினை 2000 ஆம் ஆண்டிலிருந்து ஆசிரியராகவிருந்து நடாத்தி வருகின்றார்.

இவரது படைப்புகள் இலங்கை, தமிழகம் மற்றும் புகலிடத்தமிழர்கள் வெளியிட்ட சஞ்சிகைகள், பத்திரிகைகளில் வெளியாகியுள்ளன. தமிழக ஆய்வரங்குகளில் இவரது புகலிடப்புனைகதைகளைப் பற்றிய ஆய்வுக்கட்டுரைகள் சமர்ப்பிக்கப்பட்டுள்ளன. தமிழகப்பல்கலைக்கழகங்களில் இவரது படைப்புகளைப்பற்றி முனைவர் மற்றும், முதுகலைத் தத்துவம் கற்கை நெறிகளுக்காக மாணவர்கள் ஆய்வுகள் செய்திருக்கின்றார்கள். 'பொந்துப்பறவை'கள் என்னும் சிறுகதை சிங்கப்பூர் கல்வி அமைச்சினால் தமிழ் மாணவர்களுக்கான பாடத்திட்டமொன்றில் உள்ளடக்கப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது. 'அமெரிக்கா' அமெரிக்கன் கல்லூரியின் (தமிழ்நாடு) பாடத்திட்டத்திலுள்ளது.

ஆனந்த விகடனின் பவள விழாப்போட்டி, எழுத்தாளர் சுஜாதா அறக்கட்டளை மற்றும் ஆழி பப்ளிஷர்ஸ் இணைந்து நடாத்திய உலக அளவிலான அறிவியற் சிறுகதைப்போட்டி ஆகியவற்றில் பரிசுகளைப்பெற்றுள்ளன. கனடாத் தமிழ் இலக்கியத் தோட்டத்தின் இலக்கியச் சாதனைக்கான இயல் விருது 2022 பெற்றவர்.